உ
சிவமயம்.
சிவகணபதிதுணை.

# ஸ்ரீ சிவகீதை வசனம்.

சகல புருஷார்த்தங்களையும் தரும் இக்கீதையானது
திருவாதியைச்சேர்ந்த அகிலாண்டபுறம்

## அ. இராமஸ்வாமி தீக்ஷிதரவர்களால்

தென்மொழியில் வசனமாக
இயற்றப்பட்டு,

திருவாதி ரேட்டிவ் ஹைஸ்கூல்
ஸம்ஸ்கிருத பண்டிதராகிய க்ஷேத்திரபாலபுறம்
பிரும்மஸ்ரீ வித்வசிரோரத்நம்

## நீலகண்டசாஸ்திரியவர்களுடைய

பேருதவியால் நன்குசீர்திருத்தப்பட்டு

தஞ்சை,
“பூர்ணசந்திரோதய அச்சுக்கூடத்தில்”
பதிப்பிக்கப்பட்டது.
1898



இதன் விலை அணு 6.

# முகவுரை.

மோக்ஷத்தையடைய விரும்பும் முமுக்ஷுக்கள் அவ்வழியை நாடி நிரதிசயானந்த முற்றிருக்க நமது கருணாநிதியாகிய ஸ்ரீசிவபெருமான், "அணுவைத்துளைத் தேழ்கடலைப்புகட்டி, குறுகத் தரித்த குறள்" போல் விரிகடலினும் விரிவாயுள்ள வேதோபநிஷத்தினது சாரங்களை ஒன்றாய்த்திரட்டி உள்ளங்கை நெல்லிக்கனிபோல் அறிந்துகொள்ளுமாறு திருவாய்மலர்ந்தருளியதாகிய இச்சிவகீதையின் வைபவம் யாதெனில்:—

அயோத்திமா நகரை அரசுபுரிந்த தசரதச்சக்கிரவர்த்தியின் செல்வமைந்தனாகிய இராமர் தமது பிதாவின் வாக்கியத்தை பரிபாலனம் பண்ணும்பொருட்டு தாமும், சீதையும், இலக்ஷ்மணருமாக வனவாசம் செய்துகொண்டு தண்டகாரணியம் அடைந்தார். அவ்விடம் அரக்கர்கோனாகிய இராவணன் காமாதுரத்தால் சீதையை அபகரித்துகொண்டுபோக இச்சைகொண்டு இராம இலக்ஷ்மணர்கள் சீதையை விட்டுப்பிரியுமாறு மாயையால் தந்திரஞ்செய்து, சமயம் பார்த்து சந்நியாஸவேடம் பூண்டு, பிக்ஷையாஜிப்பவன் போல் சீதையின் பரணசாலையை அடுக்க, பிக்ஷைபோடவரும் அவ்வருந்ததிக் கருப்பினளைத் தூக்கிக்கொண்டு ஆகாய மார்க்கமாய் சமுத்திர மத்தியிலுள்ள தனது வாசஸ்தானமாகிய இலங்கை போய்ச்சேர்ந்தான். இராமர் மனைவியை யிழந்த துயரத்தால் ஓயாக்கவலைகொண்டு புத்திக்கு யாதும் புலப்படாது உயிரைவிட விரும்பினர். அப்போது அக்குறிப்பினை அறிந்த அகஸ்தியமா முனிவர் அவ்விராமரிடம் வந்து அவரது மனக்கவலையை தத்துவோபதேசத்தால் மாற்றும்படி எவ்வளவோ உபாயங்கள் கூறியும், இராமர், தனக்கு இவ்வுபதேசங்களால் மனக்கவலை

நீங்காதென்றும், சீதையை மறுபடியும் அடையும் வண்ணம் அனுக்கிரகிக்கவேண்டுமென்றும், அடிக்கடிவேண்ட, அப்பால், அகஸ்தியர் இராமருக்கு விரஜாதீக்ஷையையும், இராவணனைசங்கரிக்க மகாபாசுபதாஸ்திரம்பெற சிவபிரானையுபாசிக்கும் வழியையுமுபதேசித்து ஆசீர்வதித்து சித்திரகூடபருவதம் அடைந்தார். அதன் பின், இராமர் கோதாவரியில் ஸ்நானஞ்செய்து, விதிப்படி விரஜாஹோமஞ்செய்து விபூதியை அங்கமெல்லாம் பூசிக்கொண்டும், அவ்விபூதியிலேயே சயனித்துக்கொண்டும், குருவால் உபதேசிக்கப்பட்ட வேதஸாரசிவஸஹஸ்ரநாமாவை எப்போதும் ஜபித்துக்கொண்டும், பொறியடக்கமுள்ளவரா யிருந்துகொண்டும், இருதய கமலத்தில் ஸ்ரீ ஜகதீசனை தியானித்துக்கொண்டும், தவஞ்செய்கையில் நான்கு மாதங்களாயின. அப்பால், எவ்வுயிர்க்கு மீசனும் ஜகதீசன், பார்வதிசமேதராய், விருஷபாருடராய், எங்கும் சைவமணம் வீச, பூமழை பொழிய, தேவதுந்துபி முழங்க, மால் அயன் இந்திரன் முதலிய தேவர்கள் பக்கத்தில் நின்று போற்ற, உலகெலாம் பேரின்ப வெள்ளத்துண்மூழ்க, காக்ஷியளிக்க, இராமர், ஆயிரம்பணமுடியையுடைய ஆதிசேடனாலும், வரணிக்கவொண்ணாத ஆத்மாராமராது ஆனந்தத்திருமேனியைக் கண்டுகளித்து அடிக்கடி அடிபணிந்து துதித்து அஞ்சலி செய்துகொண்டு நிற்க, ஸ்ரீ ஜகதீசன், இராமனை அருகில் அழைத்து மகா பாசுபதாஸ்திரம் அளித்து, பின்னர், தேவர்களை நோக்கி நீங்கள் உங்களது திவ்யாஸ்திரங்களை இவருக்குக்கொடுத்து, நீங்களும் வானரர்களாய்ப் பிறந்து இராவண சங்காரத்தில் இராமருக்கு உதவி புரியுங்களென ஆஜ்ஞாபித்து, இராமருக்கு பாசுபதாஸ்திரத்தின் மகிமைகளையும் திருவாய்மலர்ந்தருளினார். அப்பால், இராமர், ஓ, கிரிஜாகாந்தா! முக்கண்ணராயும், சுத்த ஸ்படிகம் போ

ன்றவராயும், அளவிடக்கூடிய இவ்வுருவத்தோடு பார்வதீசமேதராய் பிரமதகணங்கள் சூழ விளங்கி விளையாடுகின்றவராயுமிருக்கின்றீரே! மெத்த ஆச்சரியம்! உம்மிடத்தில் இப்பஞ்சபூத சராசர மூண்டாவதெப்படி? தேவரீர் அடியேனுக்குள்ள இச்சமுசயத்தை நீக்கி அருள்புரிய வேண்டுமெனப் பிரார்த்திக்க ஸ்ரீ சிவபெருமான் இந்த கீதோபதேசத்தால் இராமரது சமுசயத்தை அகற்றி அருள்புரிந்து அந்தர்த்தானமாயினார்.

பாத்துமபுராணத்தின் உத்திரகண்டத்தில் பதினாறு அத்தியாயங்களடங்கிய இச்சிவகீதையானது சூதமுனிவரால் சௌனகாதிமகரிஷிகளுக்குச் சொல்லப்பட்டது.

அ. இ.

உ

## சிறப்புப்பாயிரம்.

திருவாதியைச்சேர்ந்த காருகுடி

C. S. நாராயணசாமி அய்யரவர்களியற்றிய

ஆசிரியவிருத்தம்.

மாதவன் புவிமீது ராமனாய்த் தோன்றியே மனைவிபிரியத் தளர்ந்து, மனமெலி வுறும்பொழுதி லுபநிடத சாரமாய் மாக்ஷிபெறுசிவகீதையை, போதவுரு வாமமல னோதவவனத்தனிஜ போதமடை வித்தவரிதாம், புனிதநூலைத் தமிழி லினிதுணர யாவரும் புகழ்நீலகண்ட சாஸ்திரிக், கோதறுகு ணத்துமறை யோனெனுங் கொண்மூக் குடித்தவடநூற்கடலினைக், குமுறியேதமிழ்மாரி பொழியவைத்திய நாதகுணமிகுத் திடுபாரதீ, தீதிலா வகிலாண்ட புராம சாமிநற் றீக்ஷித ரிரண்டுபேரும், திரமாக வுலகினுக்குதவவச் சிட்டுத்திறங்கொள வளித்தனரரோ.

உ

சிவமயம்.

## காப்பு—வெண்பா.

வேதவுருவாகிய வியாஸர்வெளி யிட்டசிவ
கீதைதனைத் தென்மொழியிற் கீர்த்திபெற—ஓதுக
சங்கரனார் பங்கிலுறை சங்கரியாள் பெற்றசுத [ற்கு
னங்கரன் குகன்பதங் காப்பாம்.

---

## கட்டளைக்கலித்துறை.

ஆரணத்துட்பொருளாஞ் சிவகீதை யனைத்தினுக்குங்
காரணன் ருசரதிக்குரைத்தானிக்கருத்தை யிந்தத்
தாரணியாவருமோரத்தமிழிற்றரச்சிவனார்
வாரணத்தான் குகன்வாணி நற்றாள்கள் வருந்துணை
[யே.

---

உ

சிவமயம்.

சிவகணபதிதுணை.

# ஸ்ரீ சிவ கீதை வசனம்.

## 1-வது அத்தியாயம், பக்தியோகம்.

சூதர் கூறுகின்றார்:—கேளீர், சௌனகாதிமுனிவர்களே! மகாபரிசுத்தமும், சமுசாரமாகிய வியாதிக்கு ஔஷதமும், கைவல்லியமென்ற முக்தியை அளிக்கலுற்றதுமான இச்சிவகீதையை ஸ்ரீமகேசுவரனது திருவருளால் யான் எடுத்துரைக்கின்றேன். மானிடர் கேவலம் பரமாத்மஞானத்தினுல்மட்டில் கைவல்லியமுக்தியை அடையத்தகுமேயின்றி கருமானுஷ்டானம், தானம் அல்லது தவம் இவைகளாலெல்லாம் அடையத்தகாததே. இரகசியத்திற்கெல்லாம் பரமரகசியமும், அதனைச் செவியுற்றமாத்திரத்தில் சாசுவதமான முக்தியை அளிக்கலுற்றதுமான எந்தச் சிவகீதையானது முந்தி தண்டகாரணியத்தில் ஸ்ரீபார்வதீபதியால் இராமச்சந்திரனுக்கு உபதேசமருளப்பட்டதோ அப்பேர்ப்பட்ட இச்சிவகீதையானது முந்தி ஸ்ரீகந்தபிரானுல் ஸனத்குமாரகு

க்குச் சொல்லியருளப்பட்டு, பிறகு, ஸனத்குமாரர் வேதவியாஸருக் கருளியதின்மேல் வியாஸமுனிவர் மிகுந்த தயவினால் அதனை எந்தனுக் கருள்செய்து திருவாக்குரைத்ததாவது:- "ஓ, ஸூதபுத்திரா! நீ இதனையாதொருவருக்கும் சொல்லக்கூடாது. அப்படிச் சொல்வாயாகில் தேவர்கள் கோபங்கொண்டு சபிப்பார்கள்" என, கேளீர், முனிவர்களே! அதற்கு யான் அவ்வியாஸனை நோக்கி வினவியதாவென்றால்,- "ஓ, பகவானே! தேவரெல்லாம் ஏன் கோபங்கொண்டு சபிப்பார்கள்? அதனால் அவர்கள் கோபங்கொள்ளும்படியான குறை அவர்களுக்கென்னவுண்டாகின்றது" என பிறகவர் எந்தனுக்குத் திருவாக்குரைத்ததாவது:—"அடா, குழந்தாய்! நீ வினவியதை விளங்குகின்றோம் கேள். எந்த வேதியர்கள் கிரஹஸ்தாசிரமத்தி லிருந்துகொண்டு நாள்தோறும் அக்கினிஹோத்திரம் முதலிய கருமங்களைச் செய்து வருகின்றார்களோ, அவர்களே தேவர்களுக்குச் சகல பயன்களையு மளிக்கவல்ல காமதேனுக்கள். ஏனென்றால், அப் பிராமணர்களால் அக்கினியில் ஆகுவதி செய்யப்படும் அவிஸினால் தேவர்கள் தங்களுக்குவேண்டிய பக்ஷிய போஜியங்கள், பான பதார்த்தங்கள் இவைகளை எல்லாம் சொர்க்கத்திலிருந்துகொண்டே பெறுகின்றார்கள். தேவர்களுக்கிதனைத்தவிர வேண்டியதைக் கொடுக்கவல்லது மற்றொன்றும் சொர்

க்கத்திலில்லை. ஆகையால் பால் கறக்கலுற்ற பசுவை ப்பறித்துவிடலானது கிரகஸ்தர்களுக்கு எவ்வாறு துக்கமளிக்கலுற்றதோ அதுபோலவே வேதியர்கள் ஞானத்தைப் பெறுதலானது தேவர்களுக்குத் துக்க மளிக்கலுற்றதாகும். ஆனதால்தான் தேவர்கள் மானிடர்களின் மனதிற் புகுந்துகொண்டு ஞானம் பெறும் விஷயத்தில் விக்கினமளிக்கின்றார்கள். ஆகை யாலே யாதொரு பிராணிக்கும் ஸ்ரீசிவபிரானிடத்து பக்தி ஜனிப்பதேயில்லை. மேலும் அதனால்தான் ஸ்ரீசூலபாணியின் மகிமைகளைத் தெரிந்துகொள்வ தில் விருப்பமுண்டாவதில்லை. ஒருக்கால் கொஞ்ச முண்டாயினும் அது மத்தியில் விட்டுப்போகின்றது. அப்படி மனிதர்களுக்குச் சிவஞானமே உண்டான போதிலும் அதில் தக்க நம்பிக்கையுண்டாவதில்லை" என, முனிவர்கள் வினவியதாவது :-" ஓ, சூதமுனி வரே! தேவர்களே பிராணிகளுக்கு இடையூறுசெய் திடில் முக்தியை எட்டுவதற்கசாத்திய மாகிவிடுமா கையால் அதனையடைய எவருக்குத்தான் வல்லமை யுண்டாகும்? ஆகையாலதனை அடைவதற்கு ஏதா யினும் வழியுண்டா இல்லையா என்பதை உண்மையா ய்ச் சொல்லவேண்டும்" என, சூதர் சொல்லுகின் றார் :—ஓ, முனிவர்களே! அனேக கோடி ஜன்மங்க ளாய்ச் சம்பாதிக்கப்பட்ட புண்ணியங்களால்தான் மானிடருக்கு ஸ்ரீசிவபிரானிடத்து பக்தி யுண்டா

கும். அவ்வாறு சிவபக்தியுண்டானதின்பேரில்தான் மானிடர் யாகம் செய்தல், ஆலயம் அமைத்தல், குளம்வெட்டுதல் முதலிய கருமங்களை ஒருவித பயனையும் நாடாமலே கேவலம் ஸ்ரீசிவபிரானுக்குத் திருப்தியளிக்கும் கருத்துடனே செய்கின்றார்கள். அதனால் மானிடர்களுக்கு ஸ்ரீ சம்புவினுடைய உறுதியான அனுக்கிரகமுண்டாகின்றது. அதன்பிறகு தேவத்தலைவரெல்லாம் பயங்கொண்டவர்களாகி இடையூறளிப்பதை விட்டு ஓட்டம் பிடிக்கின்றார்கள். அதனால் ஸ்ரீசந்திரசேகரனுடைய திவ்விய சரித்திரங்களைக் கேட்க விருப்பமுண்டாகின்றது. பிறகு அவ்வாறு கேட்பதினால் ஞானமுண்டாகி, அப்பேர்கொத்த ஞானத்தினால்தான் மோக்ஷம் பெறலாகும். அதிகமாய்ச் சொல்வதாலென்ன பயன்? யாவருக்கு ஸ்ரீசிவபிரானிடத்து திடமான பக்தி உண்டாகின்றதோ அவர் கோடி கோடிகளான பிரம்மகத்தி முதலிய மகாபாதகங்களாலும், மற்ற உபபாதகங்களாலும் முன்பற்றப்பட்டிருந்தாலும் முக்தி யடைகின்றார். மேலும் அசட்டையாலாவது, வீண் வியாஜத்தினாலாவது, பரிகாசத்தினாலாவது, மாயையாலாவது சிவபக்தியில் முயன்றவனாயினவன் கடைச்சாதியனாயினும் அப்பேர்க்கொத்த பாபங்களினின்றும் மீளுகின்றான். இவ்விதமாக பக்தியானது எல்லோர்களாலும், எக்காலத்திலும், எந்தவிதத்திலும்

செய்யத்தக்கதா யிருக்கின்றது. அப்பேர்க்கொத்த பக்தியானது ஒன்றிருக்கையில் எந்த மானிடன் சமுசாரத்தினின்று மீளவில்லையோ அப்பேர்க்கொத் தவனைத்தவிர வேறெவன்தான் புத்திமூடன்? எவ னொருவன் பக்தியையாயினும் அல்லது (எச்சிலுமிழ் தல், கல்லெறிதல் முதலிய) துரோகத்தையாயினும் உறுதியாய்ச் செய்தவரில் ஸ்ரீஸர்வேசுவரர் பிரஸ ன்னராகி அவனுக்குக்கூட வேண்டிய பயனையருளு கின்றார். மேலும் எவன் ஓர் வில்வம்முதலிய தழை யையாவது அல்லது ஒருள்ளங்கை யளவு சலத்தை யாவது ஸ்ரீபரமேசுவரனுக்கு உறுதியுட னளிக்கின் றானோ அவனுக்கு அவர் மூவ்வுலகையும் கொடுத் தருளுகின்றார். அதற்கும் திறமையில்லாத ஒருவன் மகேசுரவனுக்கு உறுதியுடன் பிரதக்ஷிண நமஸ்கார ங்களைச் செய்திடில் அவனிடத்து அவர் சந்தோஷங் கொண்டவராகின்றார். அதற்கும் திறமையற்ற ஒரு வன் தான் நடக்கும்போதாயினும் உட்காரும்போதா யினும் சிவபெருமானை மனதினால் நினைத்திட்டாலுங் கூட அவனுக்கு வேண்டியதை எல்லாம் அவரருளு கின்றார். வில்வக்கட்டையின் சந்தனமும், காட்டி லுண்டாகிய மலர்களும், கனிகளுமே அவருக்கு பிரீ தியுள்ளவைகளா யிருக்கையில் இம்மூவுலகினிலும் அவரைச் சேவிப்பதில் என்ன பாரமிருக்கின்றது? அப்பரமேசுவரனுக்குக் காட்டுப்பண்டங்களில் எவ்வ

ளவுபிரீதியோ அவ்வளவு பிரீதி உத்தமமான நாட்டுப் பண்டங்களிலில்லையே! ஆகையின லப்பேர்கொத்த அருந்தெய்வத்தைவிட்டு மற்றத் தெய்வங்களை எவன் தொழுகின்முனே அவன் கங்காநதியைவிட்டு கானல் நீரை இச்சிப்பவனுவான். என்முலும் எவனுக்குக் கோடிஜன்மங்களாய்ப் பாவங்கள் சம்பாதிக்கப்பட்டிருக்கின்றனவோ அப்பேர்க்கொத்த, புத்திபிரமத்தினுல் மௌட்டியங்கொள்ளப்பெற்ற மனதைக்கொண்ட, மனிதர்களுக்கு இப்பொருள் விளங்கவேமாட்டாது. இன்னகாலம், இன்னதேசம், இன்னவிடமென்ற நிபந்தனையேயில்லாமல் அவரவர் மனதிற்குப் பிடித்தபடிக்கே ஸ்ரீசிவபெருமானைத் தமது ஆத்துமாவாகவே தியானஞ் செய்தமாத்திரத்தில் அவன் சிவஸாயுஜ்யத்தை யடைகின்முன். ஓரரசன், தான் மிகவற்பமானஆயுளையும்சம்பத்தையுமுடையவனும், பூமியின் ஓர் ஏகதேசத்தினு மேகதேசம்மட்டிற்கும் அதிபனுமாயினும், மற்றொருவன் "யானே யரசன்" என்று சொல்விடில் அவனைக் குடியோடு நாசஞ்செய்துவிடுகின்முன். அவ்வாறிருக்க ஸ்ரீசர்வேசுவரனே அவர் சகலலோக கருத்தரும், என்றும் அழிவற்ற மெத்த வைசுவரியங்களைக் கொண்டவருமாயினும், 'சிவோஹம்' (யானே சிவன்) என்றெப்பேர்ப்பட்டவன் சொல்லினும் அவனுக்குத் தமது ஆத்துமஸாயுஜ்யத்தை யருளுகின்முரன்றே! ஓ, முனிவர்களே!

எதனால் அறம், பொருள், இன்பம், வீடுகளின் கரை யைச் சேரலாகுமோ அப்பேர்க்கொத்ததான பாசு பதமென்ற விருதத்தை உங்களுக்கு எடுத்துரை க்கின்றேன். நீங்கள் விரஜாதீக்ஷை பண்ணிக்கொ ண்டு திருநீறு, உருத்திராக்ஷங்களைப் பூண்டவர்க ளாகி வேதசாரமென்ற சிவஸஹஸ்ரநாமத்தை ஜபம் பண்ணினால் அதனால் மானிடத் தன்மையை விட் டுப்போட்டு சிவபிரானது திருமேனியை (ஸாரூப் பிய பதவியை) யடையலாவீர்கள். அதன்மேல் உல கங்களுக்குச் சுகத்தை யளிக்காநின்ற ஸ்ரீ சங்கர பகவான் பிரஸன்னராகி உங்களது முன்னிலேவந்து உங்களுக்குக் கைவல்லிய முக்தியை யருளுகின்றார். ஓ, முனிவர்களே! பூர்வத்தில் தண்டகாரணியத் தில் அகஸ்தியபகவானால் இராமச்சந்திரனுக்கு உப தேச மருளப்பட்டதை யெல்லாம் யானுங்களுக்கு எடுத்துரைக்கின்றேன். நீங்கள் அதனைப் பக்தி யுடன் கேட்கவேண்டும்.

முதலாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 2-வது அத்தியாயம், வைராக்கியயோகம்.

முனிவர்கள் வினவியதாவது:—“ஓ, சூதமுனி வரே! அகஸ்தியமுனிவர் இராமச்சந்திரன் சமீபம் எதற்காக வந்தருளினர்? அவர் அவ்விராமருக்கு

எவ்விதமாய் விரஜாதீக்ஷை செய்துவைத்தார்? பிறகு இராமர் அத்திக்ஷையைப்பெற்று என்ன பலனைப் பெற்றார்? அதனைத்தயவுசெய்து அடியேங்கட் கருளவேண்டும்" என, சூதர்கூறுகின்றார். ஜனகமகாராஜன் பெண்ணாகிய சீதையை இராவணனெடுத்துக்கொண்டு போனதின்மேல், அப்போது இராமர் சீதையை விட்டுப்பிரிந்த துயரத்தால் இராப் பகலாய்த் தூக்கமில்லாமலும், ஆகாரமில்லாமலும், தம் சரீராபிமானமில்லாமலும், புலம்பிக்கொண்டு பிறகு தன் தம்பியுடன் உயிரையிழக்க விரும்பினார். அப்போது லோபாமுத்திரையின் கணவனான அகஸ்தியர் அதையறிந்து இராமனிடம்வந்து, அவருக்குச் சமுசாரத்தின் சாரமின்மையை உபதேசித்ததாவது: ஓ, இராஜசிரேஷ்டா! என் துக்கப்படுகின்றீர்? அந்த சீதை யாருடையமனைவியென்று ஊகித்துப்பாரும். பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயமாகிய பஞ்சபூதங்களால் அமைக்கப்பட்ட ஜடமாகிய இச்சரீரம் எவ்வாறு அறிவுளதாகும்? பற்றுதலில்லாதவரும் எங்கும்நிறைந்தவரும், ஸச்சிதானந்தசுவரூபருமான பரமாத்துமாவானவர் பிறப்பதுமில்லை, இறப்பதுமில்லை, துயரத்தையடைகிறதுமில்லை. சூரியன் சகல லோகங்களுக்கும் கண்ணாயிருக்கும் தன்மையில் அமைக்கப்பட்டிருக்கினும், அது ஒருக்காலும் கண்களுக்குரியவியாதிகள் அல்லதுபார்க்கத்தகாதவைகளைப்

பார்ப்பதாலுண்டாகிய பாபங்களால் பற்றப்படாதது போல் ஆத்துமாவானது சகலப் பிராணிகளிடத்தும் உட்புகுந்திருக்கினும் யாதொருதுக்கங்களாலும் பற்றப்படமாட்டாது. மலபிண்டமாகிய இத்தேகமோ வென்றால் ஜீவன்பிரிந்தமாத்திரத்தில் சுத்தஜடப்பிரகிருதியாகி, விறகுமுதலியவைகளால் தீயாலெரிக்கப்படவாவது, அல்லது, நரிமுதலியவைகளால் புசிக்கப்படவாவதாகின்றது. அங்ஙனமாயினும் அதை அத்தேகமுணர்வதில்லை. தங்கத்திற்கொப்பான மஞ்சள் நிறமுள்ளவளென்றும், அல்லது, அருகம்புல்லுக்கொப்பான பசுமையான நிறமுள்ளவளென்றும், பருத்து உயர்ந்துபரவின கொங்கைகளின்பாரத்தினால் வளையலுற்ற மிகநுட்பமான இடையையுடையவளென்றும், பெரிதானமுன்தட்டு பின்தட்டுகளையும், செந்தாமரைபோன்ற பாதங்களையுமுடையவளென்றும், பூர்ணசந்திரனையொத்த முகத்தையும், கோவைக்கனியொத்த உதடுகளையுமுடையவளென்றும், கொழுத்தகுயிலுக்கொப்பான பேச்சுடையவளென்றும், மதகஜம்போன்ற நடையுள்ளவளென்றும், நினைத்து அவள் மன்மதனுடைய அம்புகளைக்காட்டிலும் சிலாக்கியமான கடைக்கண்பார்வைகளால் என்னை அனுக்கிரகிக்கிறாளென்று காமன் கணையால் கட்டுண்ட எந்தமூர்க்கன் நினைக்கிறானோ, ஓ, அரசனே! அவனுடைய ஞானமின்மையைச் சொல்லுகின்றேன்,

ஜாக்கிரதையாய்க்கேட்கவேண்டும். இவ்வாத்துமாவோ பெண்ணுமல்ல, ஆணுமல்ல, அலியுமல்ல; சரீரமில்லாத எங்கும் நிறைந்தஜீவனோடுகூடின புருஷன் எல்லாவற்றிற்கும் சாக்ஷியாயிருக்கிறான். எவள் மெதுவாயும், மெல்லியதானசரீரமுடையவளோ அவள் கேவலம்ஜடமும் மலபிண்டமுமானசரீரமுடையவள். அவள் ஒன்றையும் பார்ப்பவளுமில்லை, கேட்பவளுமில்லை, முகருகிறவளுமில்லை. அவளுடைய தேகமென்பது வெறுந்தோலே. ஓ, இராகவா! நன்றாய் ஆராய்ந்துபாரும். நீர் எவளை உயிரினும்அதிகமாய் எண்ணுகிறீரோ, அவள் உமது வெறுப்புக்கே இடமாகின்றாள். இப்பாஞ்சபௌதிக பிராணிகள் பிருதிவியாதிபூதங்களிடமிருந்துண்டாகின்றன. ஆத்துமாவோ ஒன்றாயும், எங்கும்நிறைந்ததாயும், என்றுமுள்ளதாயுமிருக்கின்றது. ஆகையால் அவைகளில் ஸ்திரீயாவள், புருஷன்யாவன்? எல்லோரும் கூடப்பிறந்தவர்களே. வீடுகள் கட்டப்பட்டபொழுது அவைகளுள் அடங்கிய ஆகாயமானது இவ்வீடுகள் தீப்பற்றி எரிந்துவிடின் ஒருவிதலயமும் அடைகிறதில்லை. அதுபோல் தேகங்களில் நிறைந்திருக்கும் நித்தியமான ஆத்துமாவானது அத்தேகங்களுக்கு அழிவுநேரிட்டபோதிலும் அழிவதில்லை. அடிக்கிறவன் தானடிக்கிறதாயும், அடிபட்டவன் தானடிபட்டதாயும் நினைக்கும் அவ்விருவர்களும் முற்றுமறியாதவர்

களே. ஏனென்றால் ஆத்துமாவானது அடிக்கவுமி ல்லை, அடிபடவுமில்லை. ஓ இராஜனே! நீர் மிகுந்த துக்கத்தோடு வருத்தப்படவேண்டியதேன் ? உமது நிஜரூபத்தை நன்றாய்த்தெரிந்துகொண்டுதுக்கத்தை விட்டுசுகமாயிரும்" என, இராமர்சொல்லுகின்றார்:- "ஓ, ரிஷிசிரோஷ்டரே! துக்கமானது சரீரத்திற்குமி ல்லை, பரமாத்துமாவுக்குமில்லையென்றால், சீதையை விட்டுப்பிரிந்ததாலுண்டான துயரமாகிற நெருப்பு என்னை எவ்வாறுபோசுக்கும். எப்போதும்என்னால் பிரத்தியக்ஷமாய் அனுபவிக்கப்படுகிற விஷயத்தை தேவரீரில்லையென்றால் அடியேனுக் கதில் எவ்வாறு நம்பிக்கையுண்டாகும். ஓ, முனீசுவரா! அவ்விஷ யத்தில் நம்பிக்கையுண்டாகும்படி எனக்குஅருளவே ண்டும்" என, அகஸ்தியர் கூறுகின்றார்:- "ஸ்ரீசம்பு வினுடைய மாயையானது ஒருவராலும் ஒருகாலமு ம் அறியமுடியாதது. அதனால் சகலஜகங்களும் மோ கிக்கப்படுகிறது. மாயையே ஜகங்களுக்கு மூலகா ரணமென்றும், அப்பேர்க்கொத்த மாயையை தன்வ சமாக வைத்திருப்பவர் ஸ்ரீமகேசுவரனென்றும் நீர் அறிந்துகொள்ளும். அவரது அமிசங்களாலே சகல ஜகங்களும் வியாபிக்கப்பட்டிருக்கின்றன. சத்திய ஞானஸ்வரூபியும், காசமற்றவரும், எங்கும்வியாபித் திருப்பவருமான ஆத்துமாவே அம்மகேசுவரன். அவ்வீசுவரனுடைய அமிசமே ஜீவலோகத்திலுள்ள

சர்வபிராணிகளின் இருதயத்திலிருக்கின்றது. கட்டைகளுடைய சம்பந்தத்தினுல் அக்கினியினின்று அனேகம் பொறிகளுண்டாவதுபோல் அனுதியாகிய கருமங்களின் (அவித்தை) சம்பந்தத்தினுல் ஸ்ரீமகேசுவரனிட மிருந்து அனேக அமிசங்கள் உண்டாகின்றன. அனுதிகளான வாஸனேகளோடு கூடிய அவ்வமிசங்கள் க்ஷேத்ரஜ்ஞங்கள் (தேகாபிமானி) எனப்படும். மேலும் மனம், புத்தி, அகங்காரம், சித்தம் ஆகிய இந்த நான்கும் அந்தக்கரணமென்னப்படும். பிறகு அவ் வந்தக்கரணத்தின்கண் முற்கூறிய க்ஷேத்ரஜ்ஞங்கள் பிரதிபிம்பிக்கலாகி, அப்பிரதிபிம்பங்களே ஜீவன்களென்று சொல்லப்பட்டு கருமங்களின் பயனே அனுபவிக்கின்றன. பிறகு அவைகள் போகானுபவத்திற்கிடமான இச்சரீரத்திலிருந்துகொண்டு விஷய சம்பந்தமான சுகதுக்கங்களே யனுபவிக்கின்றன. அச்சரீரம் ஸ்தாவரம், ஜங்கமம் என இருவகைப்படும். அவற்றுள் மரம், புல், பூண்டு முதலிய பதார்த்தங்கள் ஸ்தாவர சரீரங்களென்றும், அண்டஜம், ஸ்வேதஜம் முதலியவை ஜங்கமங்களென்றும் பிரிக்கப்பட்டிருக்கின்றது. சரீரத்தையடைவதற்கு சிலர் பிராணிகளின் யோனியையும், சிலர் மரங்கள் முதலிய ஸ்தாவரங்களேயும் அவரவர்களின் கருமங்களுக்குத் தக்கபடி அடைகின்றுர்கள். ஜீவனுனது யாதொன்றுலும் பற்றப்

படாத பரஞ்சோதிப் பொருளேயாயினும் ஸ்ரீபரமே சுவரனதுமாயையினல் மோகிக்கப்பட்டதாகி, 'நான் சுகமுடையவன், நான் துக்கமுடையவன்' என்று நினைக்கலாகின்றது. காமக் குரோத லோப மோக மத மாத்ஸரிய ரூபங்களான இவ்வாறையும் அகங்கா ரத்திற்குக் காரணங்களாகச் சொல்லுகிறார்கள். சுவ ப்னுவஸ்தையிலும் ஜாக்கிரதாவஸ்தையிலும் கட்ட ப்படுகிற ஜீவனே சுஷுப்தியவஸ்தையில் அப்பந்தம் இல்லாமையால் ஸ்ரீசங்கரனுகவாகின்றது. அது வே மாயையுடன் சம்மந்தப்பட்டு சுகதுக்கங்களுக்கு காரணமாகின்றது. முத்துச்சிப்பியில் வெள்ளிதோ ன்றுவதுபோல் சிவனிடத்தில் இவ்வுலகம் மாயை யால் காணப்படுகின்றது. ஆகையால் மாயையையும் சிவனையும் பகுத்தறிபவன் துக்கத்தை யடைகிற தில்லை. ஓ, இராமா! துக்கத்திலிருந்தும் விடுபடு, ஏன் வீணுகப் பரதவிக்கின்றீர்? என, இராமர் கூறு கின்றார்:- “ஓ, முனிசிரேஷ்டரே! அடியேனுக்குத் தேவரீரால் சொல்லப்பட்டயாவும் உண்மையேயா யினும், முன்செய்த கருமத்தினுலுண்டான இவ்வுப த்திரவமானது விடுகிறதில்லை. கள்ளானது மஹா ஞானியையுங்கூட எவ்வாறு மதிமயங்கச்செய்யுமோ அதுபோல் பிராரப்தானுபவமானது விவேகிகளையும் விடுகிறதில்லை. பிறகு, ஜாஸ்தியாகச்சொல்லுவதில் என்னபயன்? பிராரப்தத்தை உதவியாகக்கொண்ட

மன்மதனும், அகங்காரமும் ஒன்றுசேர்ந்து இராப்பகலாய் என்னையுபத்திரவப்படுத்துகின்றன. மிகவும் சகிக்கமுடியாத துக்கத்தால் பீடிக்கப்பட்ட ஜீவனானது இந்தஸ்தூலதேகத்தை விட்டுவிடுகின்றதாகையால், நான் ஜீவித்திருக்குமுபாயமொன்று அருளவேண்டும்" எனப்பிரார்த்தித்தார்.

இரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 3-வது அத்தியாயம்.

## விரஜாதீக்ஷை நிரூபணம்.

அகஸ்தியர் கூறுகின்றார்:-" எவன் காமக்குரோதாதிகளால் பீடிக்கப்பட்டு இந்தஹிதமானவார்த்தையைக் கேட்கவில்லையோ, அவனுக்கு மறிக்க இச்சையுள்ளவனுக்கு ஔஷதத்தில் விருப்பமில்லாததுபோல், ஹிதத்தில் சித்தம் நாடுகிறதில்லை. ஓ, இராமா! மகாமாயாவியான இராக்ஷதனுலே நடுசமுத்திரத்திற்கு எடுத்துக்கொண்டுபோய் வைக்கப்பட்டிருக்கிற சீதையானவள் எப்படி உன்னிடம் வந்துசேருவாள். தேவர்களெல்லாம் குரங்குகளைப்போல் இராவணன் தலைவாயிலில் கட்டுப்பட்டும் தேவஸ்திரீகளெல்லாம் அவனுக்கு வெண்சாமரம் வீசிக்கொண்டுமிருக்கிறார்கள். ஸ்ரீபரமசிவானுக்கிரகம்பெற்று மகாகெருவத்

துடன் இம்மூவுலகையுமாளும் இராவணனை நீரெவ்வாறு ஜயிக்கப்போகின்றீர். தேவர்களைப்போர்முனையில் பன்முறை பயந்தோடச்செய்த மகாபராக்கிரமசாலியும், கருவிஷ்டனும், ஈசுவரப்பிரசாதம்பெற்றவனுமான இந்திரஜித்தென்னும் குமாரன் அவனுக்குண்டு. தேவர்களைவதைப்பதில் வலிமையுடைய கும்பகர்ணனும், திவியாஸ்திரங்களோடு கூடியவனும், நித்தியத்தும்பெற்றவனுமாகிய விபீஷணனும் அவன் தம்பிகள். அனேககோடி சதுரங்கசைனியங்களோடு கூடினதும், நாற்புறமும் சமூத்திரத்தால் சூழப்பட்டதும், தேவாசுரர்களாலும் ஜயிக்கமுடியாததுமான இலங்காபுரியென்னும் ஓர் கோட்டையிருக்கின்றது. அதற் கிறைவனுகிய இராவணனை நீர் சைனியபலமின்றி வெற்றிபெற எண்ணுவது, குழந்தையானது சந்திரனைப் பிடித்து கையிற்கொண்டு விளையாட விரும்புவதுபோலாகின்றதே " என, இராமர் சொல்லுகின்ருர்:-"ஓ, ரிஷிசிரேஷ்டரே! என்மனைவியை அபகரித்துக்கொண்டுபோன அவ்வரக்கனை க்ஷத்திரியகுலத்திற் பிறந்த யான் விரைவிற் கொல்லாவிடில் இனி உயிரை வைத்திருப்பதில் என்ன பயன்? ஆகையால், தேவரீருடைய தத்துவோபதேசங்களாலடியேனுக்கு ஒருவித பிரயோசனமுமில்லை. காமக்குரோதங்கள் என் சரீரத்தை தகிக்கவும், அகங்காரம் என் ஜீவனைக்கொல்லவும் முயன்றுவிட்டதே.

சத்துருக்கள் தன் மனைவியை அபகரித்துக்கொண்டு போனபிறகு, தான் அவர்களால் அவமதிக்கப்பட்டிருந்தபோதிலுங்கூட தன் மனைவியை மீட்காது அப்போது தத்துவவிசாரஞ்செய்ய விரும்புகிறவன் உலகத்தில் புருஷர்களில் அதமன். ஆகையால், ஓ, முனிவரே! சமுத்திரத்தைத் தாண்டி யுத்தத்தில் அவனைக் கொல்லுமுபாயத்தை எடுத்துரைக்க எனக்குக் குருவாகிய தேவரீரைக்காட்டிலும் வேறொருவருமில்லை" என, அகஸ்தியர்:- "ஓ, இராமா! இவ்வாறு உன்னால் சொல்லப்பட்ட யாவும் உண்மையாயின் ஸ்ரீபார்வதீநாதனை நீ சரணமடைவாயாகில் அப்போது ஷாட்குணியபரிபூரணரான அப்பகவான் பிரஸன்னராகி நின் அபீஷ்டத்தை நிறைவேற்றுவார். பிரும்மா, விஷ்ணு, இந்திராதிகளால் ஜயிக்கமுடியாத மகாவரப்பிரசாதம்பெற்ற இலங்கேசுவரனை பரமசிவானுக்கிரகமில்லாது நீ எவ்வாறு யுத்தத்தில் ஜயிப்பாய்? ஆகையால், உனக்கு என்னால் செய்துவைக்கப்படும் விரஜாதீக்ஷையைப் பெற்று, மானிடனாகிய நீ திவிய தேஜோரூபத்தையடைந்து, பிறகு சத்துருக்களைச் சமர்க்களத்தில் சங்கரித்து சகலபோகங்களுடனும் பூமண்டலத்தை அரசாண்டு முடிவில் சிவஸாயுஜியமடைவாய்" என்றுரைக்க, இராமர் மிகவும் சந்தோஷமடைந்து அகஸ்தியரைத் தண்டனிட்டு துதித்து அம்முனிவரைநோக்கிப் பின்வரு

மாறு சொல்லத்தொடங்கினர்:- " ஓ, முனீசுவரா! நான் எண்ணிய வெண்ணம் கைகூட இப்போது கிருதார்த்தனானேன். கடல்நீரை யெல்லாம் கையிலடக்கி உட்கொண்ட நீரே அடியேனுக்கு அனுக்கிரகஞ் செய்திடில் அடியேனால் அடைவதற்கு அசாத்தியமானதெது? ஆகையால், அன்புகூர்ந்து அவ்விரஜா தீக்ஷையை அருளவேண்டும்" என, அகஸ்தியர் சொல்லுவாராயினர்:- "சுக்கிலபக்ஷத்தில் சதுர்தசி, அஷ்டமி, ஏகாதசி இவைகளிலாவது, திங்கள்கிழமையிலாவது, திருவாதிரை நக்ஷத்திரத்திலாவது, விரஜா தீக்ஷையை ஆரம்பஞ்செய்யவேண்டும். சாசுவதராகவும், உயர்ந்ததைக் காட்டிலும் உயர்ந்ததாகவும், பரத்தைக்காட்டிலும் மிகப்பரமாகவும், விஷ்ணு, பிரும்மா, அக்கினி, வாயு ஆகிய இவர்களுக்குக் காரணருமான ஸ்ரீபரமேசுவரனைத் தியானித்து, மூலக்கனலை மூட்டி, தனித்தனியாகச் சோதித்து, ஸ்தூலமான பஞ்சபூதங்களை * மாத்திரைகளின்குணவிதியின்

* மாத்திரைகளின் குணவிதியின்படியென்றால்,- முதலில் ஐந்து குணமுள்ள பிருதிவியையும், நான்கு குணமுள்ள அப்புவையும், மூன்று குணமுள்ள தேயுவையும், இரண்டு குணமுள்ள வாயுவையும், ஒரே குணமுள்ள ஆகாயத்தையும், முறையே தத்தம் காரணத்தில் லயப்படுத்துவதென்பது கருத்து.

படி லயப்படுத்தி, அவ்வாறே * பஞ்சதன்மாத்திரை களை 5-4-3-2-1, முறையே இவ்விதமாய் லயப்படுத்தி, பிறகு மாத்திரையேயில்லாமல் துவாதசாந்தத்தி லிருத்தி, அமுதமாகவாகி, பாசுபதமென்ற விருதத்தை யனுஷ்டிக்கவேண்டும். காலையில் சாவதானமா யிருந்து, இந்த பாசுபதமென்ற விருதத்தைச் செய்யப்போகிறேனென்று சங்கற்பஞ்செய்துகொண்டு தன் வேதசாகையினது கிருஹியத்தின்படி அக்கினியைப் பிரதிஷ்டைசெய்து, ஆகாரமில்லாதவனாய் மகாபரிசுத்தனாக ஸ்நானஞ்செய்து, வெளுப்பான வஸ்திர முடித்திக்கொண்டு, யஜ்ஞசூத்திரம் (பூநூல்), வெள்ளைப்புஷ்பங்கள், திருநீறு ஆகிய இவைகளையணிந்து கொண்டு, புத்தியைப் புறத்தில்போகவிடாது, விரஜாதீக்ஷை மந்திரங்களால் (பிராணபான) முதற் கொண்டு (அனுவாகம்) முடிகிறவரையில் ஸமித்துகளையும், நெய்யையும், சரு (ஓமத்தில் பக்குவம்பண்ணிய அன்னம்) க்களையும், தனித்தனியாகவே ஓமஞ்செய்யவேண்டும், யாதே அக்னே என்னும் மந்திரத்தால் ஆத்துமாவில் அக்கினியை இயற்றி, அக்னிரித்யாதி மந்திரங்களை யுச்சரித்து விபூதியையெடுத்து

---

* தன்மாத்திரையை லயப்படுத்துவதென்றால்,—சூக்ஷ்ம பிருதிவியை சூக்ஷ்ம அப்புவிலும், சூக்கும அப்புவை சூக்கும தேயுவிலும், சூக்கும தேயுவை சூக்கும ஆகாயத்திலும் லயப்படுத்துவது.

உடம்பிற் பூசிக்கொள்ளவேண்டும். விபூதியினல் பூசப்பட்டும் மகாவித்துவானுமாயிருக்கிற பிராமணனவன் மகாபாதகங்களாலுண்டான பாவங்களினின்றும் விடுபடுகின்றுன். அதில் சந்தேகமேயில்லே. விபூதியானது அக்கினிவீரியமாகையால் அதைப் பூசிக்கொண்டவனும் மகாவீரியவானே! விபூதிஸ்னனத்தில் பிரியமுள்ளவனும், அவ்விபூதியிலேயே படுப்பவனும், இந்திரிய நிக்கிரகமுள்ளவனுமான பிராமணன் பாவங்களினின்று விடுபட்டு சிவஸாயுஜ்ஜியம் அடைவான். ஓ, அரசனே! இவ்வாறிருந்துகொண்டு சிவநாமஸஹஸ்ரத்தை (சிவபெருமானது 1000 திருநாமாக்கள்) ஜபித்துக்கொண்டிரும். வேதஸாரமாகிய சிவஸஹஸ்ரநாமாவானது பரமசிவனது அருளேயடைவதற்கு முதற்காரணமும், சர்வாபீஷ்டத்தை யளிக்கும் மகிமையையுடையதுமென்று இவ்வாறு உபதேசித்து பின்னும், அகஸ்தியர், ஓ, இராமா! நீ இரவுபகலாய் அந்நாமாக்களே ஜபித்தால் ஸ்ரீஜகதீசன் மகாபாசுபதமென்ற அஸ்திரத்தை உனக்கு அளிப்பார். அதனுல் நீ சத்துருக்களே வென்று உனது மனேவியை அடையப்போகிறுய். சமுகாரகாலத்தில் ஈசுவரனுடைய அஸ்திரமானது உலகத்தைப் பொசுக்கிவிடுவதுபோல், அவ்வஸ்திர மகிமையால் சமுத்திரத்தை வற்றடிக்கப்போகின்றுய். அவ்வஸ்திரமில்லாவிடின் அரக்கர்களே ஜயிப்பது

அரிதாகையால் பாசுபதாஸ்திரம் பெற சங்கரனைச் சரணமடைவாய்" என மொழிந்தார்.

மூன்றாவது அத்தியாயம் முற்றிற்று.

---

4-வது அத்தியாயம்.

## இராமருக்கு சிவபிரான் காக்ஷி அருளல்.

சூதர் கூறுகின்றார்:-முனிசிரேஷ்டரான அகஸ்தியர் இவ்வாறாக இராமருக்கு உரைத்துவிட்டு தமதாசிரமம் சென்றபின் சித்திரகூடபருவதத்திற் கருகிலுள்ள பரிசுத்தம்பொருந்திய கோதாவரிநதிக் கரையில் இராமர் சிவலிங்கப்பிரதிஷ்டை செய்து, தாம் சாஸ்திரவிதிப்படி தீக்ஷை செய்துகொண்டு, எல்லாவங்கங்களிலும் திருநீறு தரித்து, உருத்திராக்ஷமாலிகை பூண்டு, பிறகு அக்கோதாவரி தீர்த்தத்தால் சிவலிங்கத்திற்கு அபிஷேகஞ்செய்து, காட்டிலுள்ள பல புஷ்பங்களால் அருச்சித்து, தாம் எப்போதும் திருநீற்றையே பூசிக்கொண்டும், அதன்பேரில் படுத்துக்கொண்டும், புலித்தோலி லுட்கார்ந்து கொண்டும், புத்தியைப் பக்கத்தில் போகவிடாது எப்போதும் சிவநாமஸஹஸ்ரத்தை ஜபித்துக்கொண்டிருந்து, முதல்மாதம் கனிவர்க்கங்களையும், இரண்டாமாதம் சருகுகளையும், மூன்றாமாதம் ஜலத்தையும், நான்காமாதம் காற்றையும் புசித்துக்கொண்டு

சந்தோஷமான மனத்தோடு சாந்தராயும் பொறியடக்க முள்ளவராயுமிருந்துகொண்டு தன்னுடைய இருதய கமலத்தில் ஸ்ரீ ஜகதீசனைப் பின்வருமாறு தியானித்தார். ஸ்ரீ பார்வதியைப் பாதி சரீரத்தில் தரித்தவரும், நான்கு கைகளை யுடையவரும், முக்கண்ணரும், மின்னலையொத்த ஜடையைத்தரித்தவரும், அனேககோடி சூரியனது பிரகாசம் போன்றவரும், அனேககோடி சந்திரனைப்போன்ற சீதளமுடையவரும், சருவாபரண பூஷிதரும், சர்ப்பமாகிய பூநூலையுடையவரும், புலித்தோலை மேலாடைகிழாடையாகக் கொண்டவரும், வரத்தையும் அபயத்தையும் கொடுக்கும் குறியுள்ள கரங்களையுடையவரும், தேவாசுரர்களால் நமஸ்கரிக்கப்பட்டவரும், ஐந்து முகமுடையவரும், சந்திரனைச்சிரசுக்குப் பூஷணமாய்க்கொண்டவரும், திரிசூலம், டமரு இவைகளைத் தரித்தவரும், எங்கும் எக்காலத்திலும் எப்பொழுதுமுள்ளவரும், விருத்தி க்ஷயம் மாறுபாடு இவைகளில்லாதவருமான ஈசுவரனை இப்படி இடைவிடாது தியானிக்கையில் நான்கு மாதங்களாயின. பிறகு பிரளயகாலத்தில் கடலிலுண்டாகும் பயங்கரமான பேரொலியோ, அன்றி, அமுதங் கடையும்போது மந்தரகிரியிலுண்டான கோஷமோ, அன்றி, பரமேசுவரனுடைய பாணாக்கினியால் பொசுக்கப்பட்ட திரிபுரங்களின் இரைச்சலோ எனும்படியான அதி

பயங்கரமுள்ள சத்தத்தை இராமர் கேட்டு, மிகப்பர பரப்புடன் ஆகாயத்தை யுற்றுப்பார்க்க, மகாதேஜ ஸொன்று தோன்றிற்று. அச்சோதியைக் கண்டவுடன் ஒன்றுந்தோன்ருதவராய்பத்துத்திக்குகளையும் பார்க்கமுடியாது பார்வையில்லாதவராய் மூர்ச்சையடைந்து கீழேவிழ்ந்து சற்றுதேர்ந்து, இவையாவும் அசுரர்களின் மாயையாயிருக்கலாமென்று ஊகித்து, பிறகெழுந்து வில்லெடுத்து நாணேற்றி தம்மிடமிருந்த திவியாஸ்திரங்களாகிய, ஆக்கினேயாஸ்திரம், வாருணம், சௌமியம், மோகனம், சூரியாஸ்திரம், பருவதாஸ்திரம், விஷ்ணுசக்கிரம், மகாசக்கிரம், காலசக்கிரம், விஷ்ணுவஸ்திரம், பிரும்மாஸ்திரம், குபேராஸ்திரம், வாயுவஸ்திரம் முதலிய அஸ்திரங்களை அச்சோதியில் பிரயோகிக்க மகாமேகத்தினுடைய ஆலங்கட்டிகள் சமுத்திரத்தில் லயிப்பது போல் அந்த அஸ்திரங்கள் யாவும் அத்தேஜஸில் ஆழ்ந்திவிட்டன. கையிலிலிருந்த தனுசும், அம்பராத்தூணியும், விரல்களைக் காக்கும்படியான உடும்புத்தோலால் அமைக்கப்பட்ட கைக்கூடும் நழுவிகீழே விழுந்து எரிந்துபோய்விட்டன. அதுகண்டு இலக்ஷ்மணர் மிகப்பயந்து மூர்ச்சையடைந்து பூமியில் விழுந்தார். இராமர் யாதும் செய்யமுடியாதவராய் பூமியில் முழந்தாளுன்றி யுட்கார்ந்துகொண்டு கண்களை மூடிக்கொண்டு பயங்கொண்டு ஈசுவரசரண

த்தை தியானித்து வாய்விட்டுறக்க சிவஸஹஸ்ரநா மாவைச் சொல்லிக்கொண்டு அடிக்கடி சிவபெரு மானை வந்தனித்தார். மறுபடியும் எட்டுத் திக்குகளை யும் செவிடாக்கக்கூடிய ஓர் சத்தம் முன்போலுன் டாகவே பூமியும் குலாசலங்களும் நடுங்கின. பிறகு நிமிஷ காலத்திற்குள் அம்மகாபிரகாசமானது சந்திரனைப்போல் குளிர்ந்ததாகத் தோன்ற, இராமர் விழித்துப்பார்க்கையில், அமுதம்பெற பாற்கடல் கடையும்போதுண்டான பெரியவெண்ணெயுண்டை போன்றதும், தங்கக்கொப்பி போடப்பெற்ற மரக தத்திற்கொப்பாகிய இரண்டு கொம்புகளையுடைய தும், இந்திரநீலக்கல்போன்ற இருகண்களையுடைய தும், கழுத்தில் குறுகிய அழகிய அலைதாடிகளையு டையதும், நவரெத்தினமிழைத்த சேணங்களோடு கூடினதும், வெண்சாமரங்களால் கட்டப்பட்டதும், கழுத்திற்கட்டிய சிறிய மணிகளின் கணகண ஓசை களால் பத்துத் திசைகளையும் நிறைப்பிக்கிறதுமான சருவாலங்காரங்களோடு கூடிய ஓர் விருஷபமானது கண்ணுக்குத் தோன்றிற்று.

அவ்விருஷபத்தின்மீது, சுத்தஸ்படிகம்போன்ற வரும், கோடிசூரியப் பிரகாசரும், அனேககோடி சந் திரன்போன்ற சீதளமுடையவரும், புலித்தோலை மேலாடையாகத் தரித்தவரும், ஸர்ப்பங்களாகிற

யஜ்ஞோபவீதங்களுடையவரும், நல்ல அலங்காரங்
களோடும் கூடினவரும், மின்னற்காந்தி போன்ற
சடையைத்தரித்தவரும், சந்திரனைச் சிரசிலுடைய
வரும், முக்கண்ணரும், நீலகண்டரும், பலவாயுதங்
களால் விளங்கும் பத்துக்கைகளோடு கூடினவரும்,
யுவாவும், சச்சிதானந்த ரூபருமாகிய இப்பேர்க்
கொத்த ஸ்ரீபுருஷோத்தமரையும், அவருடைய பக்க
த்தில் சந்தோஷமாக உட்கார்ந்துகொண்டிருக்கும்
சந்திரனுக்குச் சமானமான முகத்தையுடையவளும்,
கருநெய்தல் மலர்போலும், மரகதத்தின் காந்தி
போன்றவுமான மேனியையுடையவளும், நக்ஷத்தி
ரங்களால் அலங்கரிக்கப்பட்ட இரவுபோல் முத்தா
பரணம் பூண்டவளும், விந்தயபருவதம் போன்ற
பருத்துயர்ந்த கொங்கைகளின் பாரத்தினால் வளைய
லுற்ற உண்டோ இல்லையோ வெனும்படி சமுசயிக்
கக்கூடிய மெல்லிய இடையையுடையவளும், திவி
யாபரணங்களோடு கூடினவளும், பரிமளச் சந்தன
ப்பூச்சுடையவளும், வாசனையுள்ள புஷ்பங்களைத்
தரித்துக்கொண்டிருப்பவளும், நீலோத்பலங்களுக்
கொப்பான நேத்திரங்களையுடையவளும், முன்நெ
ற்றியில் தொங்கும் சுருட்டை மயிர்களாலும், தாம
பூலந்தரித்த சிவந்த உதடுகளாலும் பொலிவுற்ற
முகத்தையுடையவளும் ஸ்ரீ சிவபெருமானுடைய சரீ
ரம் தன்மேற்படுவதினால் மயிர்க்கூச்சலுள்ள சரீர

முடையவரும், சகலலோகத்திற்கும் மாதாவாகிய வருமான ஸ்ரீ பார்வதி தேவியையும் கண்ணுற்றார்.
தத்தம் மனைவிகளோடு வாகனங்களி லேறிக்கொண்டு பல்வாயுதங்களைக் கையில் தரித்துக்கொண்டு (பிருஹத், ரதந்தரம்) முதலிய ஸாமாக்களை கானஞ் செய்துகொண்டு ஸ்ரீ பார்வதி பரமேசுவரரைச் சூழ்ந்துகொண்டிருக்கிற திக்பாலகர்களையும், நீருண்ட மேகம் போன்ற மேனியையுடைய கருடவாகனரூடராய், சங்குசக்கிர தாரியாய், மின்னற்கொப்பான காந்தியையுடைய லக்ஷ்மிசமேதராய், பக்கத்தில்மனதை விடாது ருத்திராத்தியாயத்தை ஜபித்துக்கொண்டிருக்கிற ஸ்ரீஜநார்த்தனரையும், ஹம்ஸவாகனாரூடராய், சரசுவதி சமேதராய் தமது சதுர்முகங்களால் நான்கு வேதங்களிலுள்ள ருத்திரஸூக்தத்தைச் சொல்லித் துதித்துக்கொண்டிருக்கும் பிரமதேவரையும், அதர்வசிரஸ் உபநிஷத்துக்களால் துதித்து நிற்கின்ற வளர்ந்த தாடியையும் ஜடையையுமுடைய முனிவர் மண்டலங்களையும், கங்கை முதலிய நதிகளோடுகூடின கறுத்த உருவத்தையுடையவனும், சிவதாசுவதர மந்திரத்தால் ஸ்ரீ பார்வதிபதியை துதித்துக்கொண்டிருப்பவனுமான சமுத்திரராஜனையும், கைவல்யோபநிஷத்தை சிரத்தையோடு கூறுகிறதுகளும் இரத்தினங்களா லலங்கரிக்கப்பட்டதுகளும் கைலயங்கிரிக் கொப்பானதுகளுமான

அனந்தன் முதலிய மகாநாகங்களையும், தங்கப்பிரம்பைக் கையிற்பிடித்து ஸ்ரீஜகதீசனுக் கெதிரில்நிற்கும் நந்திகேசுவரரையும், வலது பக்கத்தில் மூஷிகத்தின் மீதுமலைபோன்ற விநாயகரையும், இடதுபக்கத்தில் மயில்மீது விளங்கும் ஷண்முகரையும், இருபக்கங்களிலும் நிற்கும் மிக பயங்கரமான சரீரத்தையுடைய மகாகாளர், சண்டேசர் ஆகிய இவ்விருவர்களையும், எரிந்துகொண் டிருக்கிற காட்டுத்தீயிக்கு நிகரான தூரத்தில்நிற்கும் காலாக்கினிருத்திரரையும், கோணலான சரீரத்தோடு எதிரில் கூத்தாடும் மூன்றுகால்களோடுகூடிய பிருங்கிரிடியையும், பற்பல விகாரமுங்களோடுகூடிய அனேககோடி பிரமதகணதிபர்களையும், நானுவித வாகனங்களிலிருக்கும் மாதிருகாதேவி மண்டலத்தையும், ஸ்ரீ பஞ்சாக்ஷரியென்ற மந்திரத்தை ஜபிக்கின்ற சித்தவித்தியாதரர்களான தேவர்களையும், நேர்த்தியான ருத்திரகீதங்களைப் பாடுகிற கின்னரக்கூட்டங்களையும், (திரியம்பக) மந்திரத்தை ஜபித்துக்கொண்டிருக்கிற அந்தணர் கூட்டங்களையும், ஆகாயத்தில் ஆனந்தப்பரவசராக நர்த்தனஞ்செய்துகொண்டு வீணகானஞ்செய்கின்ற நாரதரையும், நாட்டியம் செய்கின்ற அரம்பை முதலிய தேவதாசிகளையும், கானம் செய்கின்ற சித்திராதன் முதலான கெந்தர்வக்கூட்டங்களையும், ஸ்ரீசம்புவுக்குக் கர்ணகுண்டலமாக வமைந்து கானஞ்செய்கிற

துகளான கம்பளன், அசுவதரனுகிய நாகங்களேயும் உடையதாய் விளங்கும் மகா வைபவம் பொருந்திய தேவசபையை இராமர் சந்தோஷமான மனதுடன் பார்த்து தழுதழுத்த வார்த்தைகளால் சிவஸஹஸ்ர நாமாவைச் சொல்லிக்கொண்டு ஸ்ரீமகேசுவரரைத் துத்தித்து அடிக்கடி நமஸ்கரித்தார்.

நான்காவது அததியாயம் முற்றிற்று.

---

5—வது அத்தியாயம்,

## இராமர் சிவானுக்கிரகம் பெறல்.

சூதர் கூறுகின்றூர்:—இழைக்கப்பட்ட அனேக நேர்த்தியான ரத்தின கிரணங்களின் காந்தி வீசுவதால் திசை யெங்கும் விசித்திர நிறம்பெறச்செய்யலுற்றதும், நதிக்கரையிலுள்ள சேற்றுல் பற்றப்பட்ட பெரிதாகிய நான்கு உருளேகளேயுடையதும், முத்துத்தோரணங்களால் அலங்கரிக்கப்பட்டு அனேக வெண்குடைகளால் சூழப்பட்டதும், தங்கமயமான கடிவாளங்கள் பூட்டிய அனேக குதிரைகளால் கட்டப்பட்டதும், முத்துக் கொடுங்கைகளேயுடைய நீண்டுயர்ந்த அழகிய விருஷபத்துவஜமுடையதும், மத்தகஜம் முதலிய மிருகங்களின் உருவம்போல் செதுக்கப்பட்டுள்ள அழகிய தண்டிகைகளேயுடைய

தும், பட்டுமெத்தையோடு கூடினதும், கற்பகமலர் மாலைகளா லலங்கரிக்கப்பட்டதும், ஏராளமான கஸ்தூரிவாசனையை யுடையதும், கர்ப்பூரம் அகிற்கட்டை இவற்றிலிருந்துண்டாகிற புகைகளின் வாசனைகளா லிழுக்கப்பட்ட வண்டுகளையுடையதும், ஊழிக்காலத்திய மேககர்ச்சனைபோன்ற நானாவித வாத்தியகோஷங்களோடுகூடினதும், வீணை வேணு இவைகளை கானம்செய்து கொண்டிருக்கிற கின்னரக்கூட்டங்களும் நிறைந்து விளங்குகிறதுமான தங்கரெதமொன்று தோன்றிற்று. இவ்வாறு கம்மால் அமைக்கப்பட்ட இரதத்தில் ஸ்ரீசங்கரர் விருஷபத்தினின்றிறங்கி பார்வதியுடன் பட்டுக்களாலமைக்கப்பட்டிருந்த ஆசனத்தில் வீற்றிருந்தார். ஜகதீசனுக்குச் சந்தோஷமாக தேவஸ்திரீகள் கவரிவசைத்தார்கள். சிறிய மணிகளினுடையவும், பாதசரங்களுடையவும் ஓசைகளாலும் வீணை வேணு முதலிய கானநாதங்களாலும், ஆண்குயில்களுடையவும் வெள்ளைப்புறாக்களுடையவும் தொனிகளுக் கொப்பான கீதங்களாலும் மூவுலகமும் நிறைக்கப்பட்டிருந்தது. ஈசுவரனுடைய அழகிய ஆபரணங்களான சீறிக்கொண்டு விளங்கும் சர்ப்பங்களைக் கண்டமாத்திரத்தில் மயில்கள் கோடிக்கணக்கான மயிற்கண்களையுடைய தங்களது தோகைகளை விரித்துக்கொண்டு நர்த்தனஞ்செய்தன. அப்போது விருஷபத்துவஜரானவர் சங்

தோஷமடைந்து அடிக்கடி நமஸ்கரித்துத் துதிக்கும் இராமரை தமது இரதத்தில் வரவழைத்து, கடத்தி லிருக்கும் சலத்தால் தாம் ஆசமனஞ்செய்து பிறகு இராமரையும் ஆசமனஞ்செய்யும்படி செய்வித்து, தமது மடியில் இராமரை வைத்துக்கொண்டு நேர்த் தியான வில்லையும், அக்ஷயமான அம்பராத்தூணி யையும், மகாபாசுபதமென்ற ஒப்பற்ற அஸ்திரத்தை யுமளித்து, சந்திரனைச் சிரோபூஷணமாகக்கொண்ட ஈசுவரன் இராமரைப்பார்த்துச் சொல்வராயினர்:— "ஓ, அரசனே! இவ்வுக்கிரமான பாசுபதாஸ்திரம் உலகத்தை நொடிப்பொழுதில் நாசஞ்செய்துவிடு மாகையால் சாதாரணமான யுத்தங்களில் இதை பிர யோகிக்கவேண்டாம். இவ்வஸ்திரத்தைத் தடுப்ப தற்கு இதற்கு மேலான அஸ்திரம் இம்மூவுலகிலும் கிடையாது. பிராணனுக்கு அபாயம் நேரிடுங்கால த்தில் மட்டுந்தான் இதை உபயோகிக்கலாம். இல் லாவிடில் உலகை நாசம்செய்துவிடும்" எனமொ ழிந்து, பிறகு மிகுந்த சந்தோஷத்துடன் உலகபால ர்களாகிய தேவர்களை நோக்கி, "நீங்கள் உங்களது அஸ்திரங்களை இவருக்குக் கொடுங்கள். அவ்வஸ்தி ரங்களால் இராவணனை இராமர் கொல்லுவார். தேவ ர்கள் அவனைக் கொல்லமுடியாத வரன் எம்மால் கொடுக்கப்பட்டிருக்கிறது. நீங்களும் வானரர்களா ய்ப்பிறந்து போர்க்களத்தில் பராக்கிரமசாலிகளாய்

இருந்துகொண்டு இராமருக் குதவிபுரியுங்கள். அத னல் நீங்கள் மிகுந்த சௌக்கியம் அடைவீர்கள்" என்றுரைக்க, அவ்வாறே சிவாஜ்ஞையைச் சிரமேற் கொண்டு, ஈசன் திருவடிபணிந்து, தத்தம் அஸ்திரங் களைக்கொடுத்தார்கள்.

அவற்றுள், நாராயணஸ்திரத்தை விஷ்ணுவும், பிரும தண்டத்தைபிருமதேவரும், ஐந்திராஸ்திரத்தைஇந்திரனும், ஆக்கினேயாஸ்திரத்தை அக்கினியும், யாமியாஸ்திரத்தை எமனும், மோகனஸ்திரத்தை நிருருதியும், வாருணஸ்திர த்தை வருணனும், வாயவியாஸ்திரத்தை வாயுவும், கௌ பேராஸ்திரத்தைக்குபேரனும், ரௌத்திராஸ்திரத்தை ஈசா னரும், ஸௌரத்தைசூரியனும், ஸௌமியத்தைசந்திரனும், பாவனமென்றதை விசுவேதேவர்களும், வாஸவமென்றதை வசுக்களுமாகிய இவர்களெல்லோரும் தங்களது திவ்யா ஸ்திரங்களைக் கொடுத்தார்கள்.

தெசரதன்செல்வனாகிய இராமர் மிகக்களிப்புற்று சிவபெருமானை வணங்கிக் கைகட்டி அஞ்சலிசெய் துகொண்டு மிகப்பக்தியுடன் தெரியப்படுத்திக்கொ ண்டதாவது:—"ஓ, ஜகதீசா! முதலில் மனிதர்க ளால் கடலைக் கடக்க முடியாது. பிறகு தேவாசு ரர்களாலும் வெல்லமுடியாத இலங்கையைப்போய் அடைவது அசாத்தியம். அன்றியும் அவ்விலங்கை

யில் அரக்கர்படைகள் அநேககோடிக்கணக்கா யிரு
க்கின்றன. அவ்வரக்கர்களெல்லாம் வேதாத்திய
யனஞ் செய்துகொண்டு, இந்திரியங்களை யொடிக்கி
சிவபக்தியிற் சிறந்தவர்களாயும், மிக மாயாவிகளா
யும், அதிபுத்திமான்களாயும், அக்கினிஹோத்திரம்
முதலியவை செய்கின்றவர்களாயு மிருக்கின்றார்கள்.
சகாயமற்ற என்னாலும் என்தம்பியாலும் எவ்வாறு
வெற்றிபெற முடியும்" என, அப்போது ஸ்ரீபகவான்
கூறுகின்றார்:— "ஓ, ரகுநந்தனா! இராவணனையும்,
அவனுடைய அரக்கர்படையையும் யுத்தத்தில் சங்
கரிப்பதற்கு அவர்களுக்குக் காலம்வந்துவிட்டபடி
யால் நீ விசாரப்படவேண்டாம். அவர்கள் அதரு
மத்திலும், தேவபிராம்ணர்களை உபத்திரவம் செய்
வதிலும் எத்தனித்ததால், அவர்களது ஆயுளும் செல்
வமும் நாசத்தை யடைந்தன. பாபியான சத்துரு
வை யுத்தத்திற் கொல்வது சாத்தியமாகையால் இரா
ஜஸ்திரீகளின் கற்பை யழிக்க முயலும் இராவண
னைக் கொல்வாய். அதருமத்தில் முயலும் பகைவர்
கள் கிடைப்பது பாக்கியமன்றோ! அனேக சாஸ்திர
ங்களைக் கற்றும் எப்போதும் தருமசீலனாயிருந்த
போதிலும் விநாசகாலம் நேரிட்டால் தருமத்திலிரு
ந்து விலகிவிடுவான். மகாபாதகனாகிய இராவ
ணன் தேவர்களையும், பிராமணர்களையும், ரிஷிகளை
யும், உபத்திரவப்படுத்துகின்றபடியால் நாசம் தானா

கவேவந்துவிட்டது. கிஷ்கிந்தாபட்டணத்தில் தேவாம்சங்களால் உண்டான மகா பராக்கிரமசாலிகளாகிய ஒருவராலும் வெல்லமுடியாத அநேக வானரர்கள் உனக்கு உதவிபுரிவார்கள். அவர்களைக் கொண்டு அனேக மலைகளால் சேதுபந்தம் செய்து, அவ்வணை வழியாய் வானரர்களுடன் சென்று இராவணனை யுத்தத்தில் கொன்று உன் மனைவியைப் பெற்றுவருவாய். சாதாரணமாய் வெற்றியுண்டாகுமிடத்து அஸ்திரங்களை உபயோகிக்கலாகாது. அம்புகளில்லாதவர்களிடத்தும், சுவல்ப அஸ்திரமுள்ளவர்களிடத்தும், பயந்தோடுகிறவர்களிடத்தும், திவியாஸ்திரங்களைப் பிரயோகித்தால் அவனே நாசத்தையடைவான். அதிகமாய்ச் சொல்லுவதால் என்ன பிரயோசனம்? எல்லாவுலகங்களும் என்னாலேயே சிருஷ்டிக்கப்படுகிறது. இரக்ஷிக்கப்படுவதும், சமுகரிக்கப்படுவதும் என்னாலேதான். நானொருவனே காலனுக்கும் காலன். சராசரமான இச்சகத்தை நானே பக்ஷிக்கிறேன். ஆகையால், ஓ, இராமா! யுத்தத்தில் அடக்கமுடியாத அரக்கர்கள் யாவரும் என் வாய்க்குள்ளே அகப்பட்டுக்கொண்டிருக்கிறபடியால், அந்தப் போரில் நீ காரணமாகமாத்திரமிருந்து புகழ் பெறுவாயாக."

ஐந்தாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 6-வது அத்தியாயம், விபூதியோகம்.

இராமர் வினவுகின்றார்:—“ ஓ, ஈசுவரா! இவ்விஷயத்தில் எனக்கு மெத்த ஆச்சரியமாயிருக்கிறது. முக்கண்ணராயும், சுத்தஸ்படிகம்போன்றவராயும், அளவிடக்கூடிய இவ்வுருவத்தோடு பார்வதி சமேதராய் பிரமதகணங்கள்சூழ விளங்கி விளையாடுகின்றவராயுமிருக்கின்றீரே! உம்மிடத்தில் இப்பஞ்சபூத சராசரம் உண்டாவதெப்படி? ஓ, கிரிஜாகாந்தா! தேவரீர் அடியேனுக் கருள்புரிவதாயின் அதைக் கூறவேண்டும்” எனப்பிரார்த்திக்க, சிவபெருமான் சொல்லத்தொடங்கினர். “கேளும், மகாபாக்கியம் பெற்ற இராமா! நீ பிருமசரியவிருதத்தோடும், மிகுந்த எத்தனத்தோடும் எதினல் சமுசாரக் கடலைக் கடப்பாயோ அப்பேர்க்கொத்த, தேவர்களாலும் அறியமுடியாத விஷயத்தைக் கூறுகின்றேன். அதை ஆவலுடன் கேட்கவேண்டும். கண்ணுக்குத் தோன்றுகிற பஞ்சபூதங்களும், பதினான்குலகங்களும், சமுத்திரங்களும், மலைகளும்,தேவாசுரர்களும், ரிஷிகளும், மற்றுமுள்ள சராசரங்களும், கந்தர்வர்களும், பிரமதகணங்களும், நாகர்களும், மற்றவைகளும் எனது விபூதிகளே. முற்காலத்தில் பிரும்மர்தி தேவர்கள் எனது உருவத்தைப் பார்க்கவிருப்பமுற்று எனது பிரியவாசஸ்தானமாகிய மந்திரகிரிக்குவந்து,

துதித்து நமஸ்கரித்து அஞ்சலியுடன் என் எதிரில் நின்றூர்கள். அத்தேவர்களைப் பார்த்தமாத்திரத்தில் நான், விளையாட்டில் உற்சாகங்கொண்ட மனத்தை யுடையவனுய் அவர்களது ஞானத்தையபகரித்தேன். உடனே அஜ்ஞானம்மேற்கொண்ட அவர்கள் என்னை 'நீயாரொன்று வினவினூர்கள்'. அப்போ தவர்களை நோக்கி, " ஓ, தேவர்களே ! யானே என்றுமுள்ளவன். முன்னிருந்தவனும் யான், இப்போதிருக்கிறவனும் யான், இனி இருக்கப்போகிறவனும் யான், என்னையன்றி வேரொருவரு மிவ்வுலகத்திலில்லை. என்னைக்காட்டிலும் வேரென்று மில்லை. நித்தியாநித்தியமும், பாபமின்மையும், பிருமாவுக்குப் பிருமனும், தெற்கு, வடக்கு, கிழக்கு, மேற்கு, கீழ், மேல், நடு முதலிய திக்குகளும் நானே. சாவித்திரீ, காயத்திரீ, ஆண், பெண், அலியும் நானே. திருஷ்டிப்பு, ஜகதி, அனுஷ்டுப்பு, பக்தி ஆகிய சந்தஸ்களும், வேத சுவரூபமும் நானே. சத்தியப்பொருளும், எங்குமிருப்போனும், சாந்தனும், யாகத்திலுள்ள காருஹபத்தியம், ஆஹவநீயம், தக்ஷணமாகிய இம்மூன்று அக்கினிகளும், கௌரவமும், குருவும், பூமியும், குகையும், ஆகாயமும், உலகங்களுக்கு எஜமானனும், எல்லோர்க்கும் பெரியவனும், சருவதேவர்களுக்குச் சிரேஷ்டனும், ஜேஷ்டனும், வரிஷ்டனும் (உருவத்தில் பெரியவன்) நானே. ஜலமும், ஜலத்திற்குப் பதி

யும், பகவானுகிய ஈசனும், தேயுவும், எல்லாவற்றிற்குமாதியும் நானே. ருக்கு, எஜுஸ், ஸாமவேதங்களும், பிரமனும், அதர்வ மந்திரமும், அங்கிரஸ் மந்திரமும், இதிகாஸ புராணங்களும், கல்பசூத்திரமும் கல்பத்தையுடையவனும், * நாராசம்ஸி என்னும் காதையும், வித்தியையும், உபநிஷத்தும், சுலோகங்களும், சூத்திரங்களும், அநுவியாக்கியானமும், வியாக்யானமும் நானே. வித்தைகளும், இஷ்டியும், ஹுதமும், ஆகுதியும், கொடுத்தலும், வாங்கலும், இவ்வுலகமும், பரலோகமும் நானே. காரணப்பொருளும், அழிவுள்ள காரியப்பொருளான சருவபூதங்களும், உட்பொறி வெளிப்பொறியடக்கமும், அப்பொறிகளுள் இருப்பவனும் நானே. வேதங்களிலுள்ள இரகசியமும், கிழத்தனமில்லாதவனும்,பிறப்பில்லாதவனும் நானே. பின்னும், தாமரையிலேயில் தண்ணீர் பற்ருததுபோல் ஒரு பற்றுதலுமில்லாத பரிசுத்தனும் யானே. நடுவும், வெளியும், உள்ளும், புறமும், ஒளியும், இருட்டும், தன்மாத்திரைகளும், இந்திரியங்களும், புத்தியும், அகங்காரமும், புலன்களும் நானே. பிரமன், விஷ்ணு, ருத்திராகிய இம்மூவர்களும், உமையும், ஸ்கந்தனும், விநாயகரும், இந்திரன்,

* நாராசம்ஸி முதல் வியாக்கியானம் வரையிலுள்ள ஒவ்வொன்றும் வேதத்திலுள்ள ஒவ்வொருபாகங்கள்.

அக்கினி, எமன், நிருருதி, வருணன், வாயு, குபேரன் ஈசானனுகிய அஷ்டதிக்குப்பாலகர்களும நானே. பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மஹோ லோகம், ஜனேலோகம், தபோலோகம், ஸத்யலோகமாகிய இவ்வேழு உலகங்களும், பிருதிவி- அப்பு- தேயு-வாயு-ஆகாயமாகிய பஞ்சபூதங்களும், சூரிய சந்திரர்களும், நக்ஷத்திரங்களும், கிரகங்களும், பிராணனும், காலமும், மிருத்யுவும, அமுதமும், சென்றதும், செல்லுகிறதும், செல்லப்போவதும், சகல பிரபஞ்சமும், சருவாத்மாக்களும் நானே. ஆதியிலும், மத்தியிலும், அந்தத்திலும், ஸத்து, சித்து, ஆனந்தமும் நானே. விசுவரூபமும், வேதபுருஷனுக்குச்சிரசாக இருக்கப்பட்ட உபநிஷத்தும் நானே. தின்னப்பட்டதும், குடிக்கப்பட்டதும், செய்யப்பட்டதும், செய்யப்படாததும், பரமும், அபரமும், யாவருமடையவேண்டிய இடமும் நானே. உலகத்திற்கு ஹிதமும், திவ்வியமும், அக்ஷரமும், மிக சூக்ஷ்மமும், பிராஜாபத்தியமென்ற விரதமும், பரிசுத்தமும், ஸௌமியமும், ஆக்கினேயமும், கிரகிக்க முடியாததும், முந்தினதும், எல்லாவற்றையும் பிரளயகாலத்தில் பக்ஷித்துவிடுகிறவனும், உலகத்திற் கிருப்பிடமும், இருதயத்தில் தேவதையாகவும், பிராணனுகவும் பிரதிஷ்டை பண்ணப்பட்டவனும் நானே,

* சிரசை வடக்குதிக்கிலும், பாதத்தை தெற்கு திக்கிலு முடையதீ எல்லாப் பொருளுக்கும் மேலான ஓங்காரமும், நிர்குணமூர்த்தியாகியனானே. உயரத்தூக்குவதாலும், கீழே தணிப்பதாலும் ஏகனுயும், நித்தியனுயும், ஸனுதனனுயுமிருக்கிற யானே அவ் வோங்காரம். [யாதொரு ஓங்காரத்தின் முதல் இரண்டு மாத்திரைகளாகிற பாதங்கள் தெக்ஷணத்திலும் (தாழவும்) மூன்ருவது மாத்திரையாகிற சிரசு உத்திரத்திலும் (உயரவும்) கடைசி அரைமாத்திரையாகிற

---

* ஓங்காரத்தை எழுதத் துவக்குங்கால் அதற்கு ஆரம்பம் வடக்கிலும், முடிவு தெற்கிலும்ஏற்படுவதால, அவ்வோங்காரத்திற்குச் சிரசு வடக்குதிக்கிலென்றும், பாதம் தெற்குதிக்கிலென்றும்,—சுழித்து மேல்நோக்கி வரைவதால் உயரத்தூக்குதலென்றும், கீழ்நோக்கிவரைவதால் கீழே தணிப்பதென்றும்,—ஓங்காரமே ஈசுவரசுவரூபமென்பது:-முதலில் சுழித்ததால் உபாதிசூனியசுவரூபரென்றும், மேல்நோக்கிவளைவாக வரைவதால் மாயையுடன்கூடி சகலபிரபஞ்சத்தையு முண்டாக்கி தன்னுளடக்கிக்கொண்டிருப்பவரென்றும், மறுபடி கீழ்நோக்கிச்சுழித்தலால் சகல மாயைநின்றும், விடுபட்டு முன்போல உபாதிசூனியசுவரூபரென்கிற விதங்களாக ஓங்காரத்தின் சுவரூபம் கூறப்பட்டது.

ஈசுவரசுவரூபத்தை, கிரந்தாக்ஷரமாகிய இவ்வோங்காரரூபமாக நிரூபிக்கப்பட்டிருப்பதால் தேவபாஷையாகிய ஸம்ஸ்கிருதபாஷைக்கேற்பட்டலிபி கிரந்தலிபியே என்பதற்கு இதையோர் பிரமாணமாக ஊகிக்கலாம்.

அமாத்திரமான துரீயமூர்த்தியானது எல்லாவற்றி லும் மேலானதாகியுமிருக்கின்றனவோ அப்பேர்ப்ப ட்ட ஓங்காரமும் நானே. நற்கருமஞ் செய்கிறவர்க ளை உயர்த்துவதாலும், தீயகருமஞ் செய்கிறவர்களை தாழ்த்துவதாலும் (உயரத்தூக்கி கீழேதணிக்கிறதெ ன்றும் ஒருவிதப்பொருளை யுணர்த்துகிறதும) ஓங்கா ரமும் யானே.] யாககருமாவில் பிரும்மாவென்னும் ரித்விக்காகிய நான் ஹோதா, அத்வரியூ, உத்காதா இவர்களுக்கு ரிக்கு, எஜுஸ், ஸாமமென்ற மூன்று வேதங்களையும் பிறப்பித்து எடுத்துக்கொடுப்பதெ ன்று பொருள்படும் பிரணவமும் யானே.

கொழுப்பானது மாமிசகண்டத்தை வியாபித்தும், வியா பிக்கச் செய்துமிருப்பதுபோல் யான் எல்லாவுலகங்களை யும் வியாபித்தும் வியாபிக்கச்செய்து மிருப்பதால் ஸர்வவி யாபி எனப்படுகின்றேன். பிரமன், விஷ்ணு, இன்னும் மற்றத் தேவர்கள் என்னுடைய ஆதியையும் அந்தத்தையும் அறியாததால் என்னை அனந்தனென்றும், கருப்பம், ஜன னம், மூப்பு, மரணம் இவைகளாகிற பயங்கரமாகிய சமு சாரக் கடலிலிருந்தும் கரையேற்றுவதால் என்னைத் தார கன் என்றும், நான்குவித சரீரங்களில் சூக்ஷ்மமாகநின்று இருதயத்தில் ஜீவனாக வசிக்கின்றமையால் என்னை சூக்ஷ் மன் என்றும், மகா அந்தகாரத்தில் மூழ்கின என் பக்தர் களுக்கு மின்னலுக்கொப்பான ஜோதியைக் கொடுக்கின் றமையால் என்னை வைத்தியுதன் என்றும், ஒருவனாகவே இருந்து சங்கற்பித்து உலகங்களை சிருஷ்டித்து, பரிபாலி த்து, சங்கரிப்பதால் என்னை ஏகோ ஈசன் என்றும் கூறுகி

ன்றார்கள். சருவஜீவகோடிகளையும் தன்னிடத்தே உப
ஸம்ஹாரஞ் செய்துகொண்டு இரண்டாவது வஸ்து இருக்
கப்பெறாத தூரியமான பிரும்மசுவரூபமாக இருப்பதால்
நான் ஏகோ ருத்திரனாக வாகின்றேன். அடக்கியாளும் சக்
திகளால் எல்லா உலகங்களையும் அடக்கியாளுவதால்
என்னை ஈசானன் என்றும், இதர அபேக்ஷையில்லாது
சுவயமாய்ப் பார்க்கிறவனென்றும், அன்னியர்களின் பார்
வைக்குக் காரணனாயுமிருக்கிறேனென்றும் கூறுகிறார்கள்.
சருவ வித்தைகளுக்கும் ஈசனாயிருக்கின்றமையால் ஈசான
னாகின்றேன். எல்லாவற்றையும் பார்ப்பதாலும், மகாபக்த
ர்களை ஆத்தும ஞானத்தையும் யோகத்தையு மறியும்படி
செய்கின்றமையாலும் பகவானாகின்றேன். எப்பொழுதும்
மகத்தத்துவத்தைக்கூட பிரளயகாலத்தில் லயப்படுத்தி
மறுபடி சிருஷ்டித்து சகல வுலகங்களை வசிக்கும்படி செ
ய்வதால் மகேசுவரனாகின்றேன். மகத்தான ஆத்துமஞா
னம், யோகம், அணிமாதி அஷ்டைசுவரியங்களாகிய
இவைகளாலும் பூஜிக்கப்பட்டு, சகல வஸ்துக்களையும்
படைத்துக் காத்து விளங்குவதால் மகாதேவன் எனப்
படுகின்றேன்.

எத்திசையும் பிரகாசிக்கும் தேவனும் நானே.
ஹிரணியகர்ப்பரூபியாய் சகலத்திற்கும் முன்பிறந்த
வனும் நானே. கருப்பத்திலுள்ளவனும், பிறந்த
குழந்தையும், இனி பிறக்கப்போகிறவனும் யானே.
எங்கும் முகம், எங்கும் கண், எங்கும் கை, எங்கும்

கால்களுமான *விராட்சுவரூபியும் யானே. மனிதர் முதலியவர்களுக்கு கை முதலியவைகளையும், பக்ஷி முதலியவைகளுக்கு இறக்கை முதலியவைகளையு மமைத்து,பூமி அந்தரிக்ஷ சுவர்க்காதிரூபமான விராட் புருஷனை சிருஷ்டித்த ஒருவனான தேவனும் யானே. சகல பிரபஞ்சத்துக்கும் தேவரும், எல்லோராலும் வேண்டத்தக்கவரும், வேதங்களையெல்லாம் தம்மி டமிருந்துண்டாக்கப்பெற்றவரும், இருதய கமலத் தின் மத்தியில் மயிர்நுனியிலும் சூக்ஷ்மமாயிருக்கிற வருமான என்னை எவர்கள் சாக்ஷாத்காரஞ் செய்கி ன்றார்களோ அவர்களே முக்திபெறுவார்களேயொ ழிய மற்றவர்கட்கில்லை. சகல பிரபஞ்சத்தின் மூல காரணத்திற்குப்பதியும் யான் ஒருவனே. ஐம்பூத ங்களா லமைக்கப்பெற்ற இவ்வெல்லாப் பிரபஞ்ச மும் என்னால் நிறைந்திருக்கிறதென்றும் என்னை ஈசானனாகவும், சகல சரீரத்திலும் அந்தரியாமியா யிருப்பவனென்றும், இவ்வாறாக நன்காய்ந்து அறி பவன் முக்திபெறுவான். பத்துப் பிராணன்கள், ஐந்து முக்கியபிராணன்கள், மனம், புத்தி இவை கள் சேர்ந்தும், பசி, தாகம் (பேராசை), பொறுமை

---

* விராட்புருஷன் பிரபஞ்ச சுவரூபியாகையால், அப்பிர பஞ்சத்திற்குள்ளான பிராணிகளின் சகல அவயவங்களும் அவருடையதே. ஆனதுபற்றி அவருக்கு எங்கும் முகம், கை, கால் முதலானவை என்பது கருத்து.

க்கும் காரணமாகியிருப்பதை ஸூக்ஷ்ம சரீரமாகச் சொல்லுகிருர்கள். இப்போப்பட்ட காரணக்கூட்டங்களுக்கு மூலமாகிய ஆசையை வேரறுத்து, ஞானத்தால் சித்தத்தை என்னிடத்தில் நிலைநிற்கச் செய்து இவ்வாருக என்னையே எவர்கள் தியானிக்கின்ருர்களோ அவர்கள்தான் நிரந்தரமான மோக்ஷத்தைப் பெறுவார்களேயன்றி, மற்றவர்கள் அடையமாட்டார்கள். எந்தப்பொருளினின்று வாக்கும் மனதும் எட்டாமல் திரும்பிவிடுகின்றனவோ அப்போக்கொத்த ஆனந்தரூபமாயும் பிரம்மரூபமாயுமிருக்குமென்னை அறிகின்றவர்களுக்கு ஒன்றினிடத்திலிருந்தும் பயமில்லை. முன்னொருகல்பத்தில் கீழேசொன்ன விதமான ஐந்தாவது முக்தியாகிய கைவல்லியத்தைத் தரும்படியான ஞானத்தைப் புகட்டும் என்வாக்கியத்தைக் கேட்ட பிரமன் முதலிய தேவர்கள் என்னையே தியானித்து எனது வேதஸாரஸஹஸ்ர நாமாக்களை ஜபித்துக்கொண்டு முடிவில் ஸாயுஜ்ஜியம் பெற்ருர்கள். உலகத்தில் தோன்றும் பதார்த்தங்களெல்லாம் என் அமிசங்களே. அவை யாவும் என்னிடத்துண்டாகின்றன; என்னிடமே யிருக்கின்றன; என்னிடமே நாசமடைகின்றன. ஆகையால் நானே அழிவற்ற பிரும்மமாக இருக்கின்றேன். அணுவுக்கு அணுவும், மகத்துக்கு மகத்தும், உலகமும், நிர்மலனும், புராதனமாய் சகல

பிராணிகளின் இருதயத்தில் வசிப்பவனும், பிரகாச ரூபனும், சுகரூபியுமாக விருக்கிறேன். கைகாலி ல்லாதிருந்தும் நினைக்கமுடியாத காரியங்களைச்செய் யும் சக்தியையுடையவனும், கண்ணில்லாது பார்க் கிறவனும், காதில்லாமல் கேட்கிறவனும், வியக்த ரூபனுமாகிய நான் எல்லாம் அறிவேன்; என்னை யறிபவனில்லை. நானே சகல வேதங்களால் அறி யத்தகுந்தவன். உபநிஷத்துக்களைச் செய்தவனும் அவ்வேதங்களை அறிந்தவனும் யானே. என்னிட த்தில் புண்ணியபாபங்களுமில்லை; பிறப்பு, இறப்பு, தேகம், இந்திரியங்கள், புத்தி, பஞ்சபூதங்களாகிய பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் இவைகளி ல்லை யென்றும் இவ்விதமாகவும், பரமாத்தும சுவ ரூபரும், இருதயகுகையில் வசிப்பவரும், அவயவ மற்றவரும், அத்துவைதரும், சகல ஜீவசரீரமாகிய புரத்தை நிர்மாணஞ்செய்தவரும், அவைகளில் ஜீவ ரூபமாய் பிரவேசித்திருப்பவரும், யாவரையும் அடக் கியாள்பவரும்,சகலத்திற்கும் சாக்ஷியாயிருப்பவரும், ஜாக்கிரத்து ஸ்வப்பின பிரபஞ்சங்களில்லாதவரு மாக என்னை யறிகின்றவன் சுத்தபரமாத்தும சுவ ரூபத்தை யடைகின்றான். புத்திசாலியான ஓ, இரா மா! இவ்விதமாக என்னை யுண்மையாய் எவன் அறி கின்றானோ அவனே உலகத்தில் கைவல்லிய பயனை அடைகின்றவனே யொழிய வேறொருவருமில்லை.

ஆறாவது அத்தியாயம் முற்றிற்று.

## 7-வது அத்தியாயம். விசுவரூப தரிசனம்,

ஓ, பிரபுவே! நான் கேட்டகேள்வி அப்படியே யிருப்பதல்லால் தங்களிடமிருந்து அதற்கு மறு மொழி எனக்குக் கிடைக்கவில்லையே. அளவிடக் கூடிய பரிமாணமுள்ள பகவனாகிய உம்முடைய தேகத்தில் எல்லாப் பிராணிகளுடைய சிருஷ்டி, ஸ்திதி, லயம் எப்படி? சகல தேவர்களும் தத்தம் அதிகாரங்களில் எப்படி யிருக்கிறார்கள்? இப்பதி னான்கு உலகங்களும் உம்முடைய சுவரூபமென்பது எப்படி? ஓ, தேவா! உம்மிடமிருந்து கேட்டுங்கூட என் சந்தேகம் பலமாயிருப்பதால் நம்பிக்கைவரும் படி செய்யப்படாத சித்தத்தையுடைய என் சந்தே கத்தைத் தேவரீர் தயவுசெய்து போக்கவேண்டு மென்று இராமர் பிரார்த்திக்க ஸ்ரீ சிவபெருமான் சொல்லுகின்றார் :—ஆலம்விதையானது மிக நுட்ப மாயிருந்தபோதிலும் பெரிய ஆலமரமானது எப் போதும் எப்படி அதிலடங்கியிருக்கிறது பார்; இல் லாவிடில் அம்மரம் எங்கிருந்து வருகின்றது, அதைச் சொல்? அதுபோலவே ஏ, இராமா! என் சரீரத் தில் சகல பிராணிகளுடைய உத்பத்தியும், லயமும். பெரிய உப்புக்கட்டிகூடத் தண்ணீரில் போடப்பட் டால் கரைந்து கண்ணுக்குத் தெரியாததாகி மறுபடி யும் காய்ச்சினால் முன்போலவே அதிலிருந்து கட்டி

யாய் வருகின்றது. காலைதோறும் சூரியமண்டலத்தினின்று எவ்வாறு வெளிச்சமுண்டாகி லயிக்கின்றனவோ, அதுபோல், இவ்வுலகெல்லாம் என்னிடத்தில் ஜனித்து இருந்து நாசமடைகின்றது. இதைப்போல் மற்றெல்லாவற்றையு மறிந்துகொள்வாயாக என, அப்போது இராமர், "ஓ, மகேசா! திசை தட்டுக்கெட்டவனுக்குச்சொல்லியும் எப்படி பிரமம் தீராதோ அதுபோல், இவ்வாறாகத் தேவரீர் சொல்லியும் என் சந்தேகங்கள் நிவர்த்தியாகவில்லையே, நான் என் செய்குவேன்" என்று கேட்க, ஸ்ரீபகவான் சொல்லியதாவது:- "ஓ இராமா! இச்சகல சராசரமான ஜகத்தானது என்னிடத்தில் எப்படி இருக்கிறதோ அவ்வாறே உனக்கு காண்பிக்கின்றேன். இக்கண்ணினால் உன்னால் பார்க்கமுடியாதாகையால் திவ்விய நேத்திரத்தைக் கொடுக்கின்றேன். அதனால் பயத்தைவிட்டு எனது தேஜோரூபத்தைப்பார். சாதாரணமாக தசையோடுகூடிய கண்ணால் என் தேஜஸைப் பார்க்கமுடியாது. மனிதர்களாலும், தேவர்களாலும் என் அனுக்கிரகமில்லாமல் பார்க்க முடியாது." சூதர்:—இவ்வாறாகச்சொல்லி ஸ்ரீமகேசுரர் இராமருக்கு திவ்யமான நேத்திரத்தைக்கொடுத்தார். அனேக மின்னல்போன்றதும், பயங்கரமானதும், திகிலடையக்கூடியதுமான பாதாளம்போலிருக்கிற வாயைக்காண்பித்தார். அதைப் பார்த்த

மாத்திரத்திலேயே இராமர் பயந்து முழந்தாளூன்றி ஈசுவரனை அடிக்கடி நமஸ்கரித்து துதித்து பிறகு எழுந்திருந்து திரிபுரமாற்றானாகிய பிரபுவின் முகத்தைப் பார்த்தார். சுவலித்துக்கொண்டிருக்கிற சுவாலைகளால் சூழப்பெற்ற காந்தியையுடையதும், சிறிய ஊர்க்குருவிபோன்றதுமான அனேக பிருமாண்டங்கள், மேரு, மந்தரம், விந்தயம்முதலான அனேகமலைகள், ஏழுசமுத்திரங்கள், சூரியன், சந்திரன் முதலிய கிரகங்கள், ஐந்து பூதங்கள், தேவர்கள், காடுகள், மகாநாகங்கள், பதினான்கு உலகங்கள் இவைகளெல்லாவற்றையும் ஒவ்வொரு பிரம்மாண்டத்திலும் பார்த்ததுமன்றி, முந்தினதும் பிந்தினதுமான தேவாசுரர்களுடைய யுத்தங்களையும், விஷ்ணுவினுடைய தசாவதாரங்களையும், அவைகளில் நடக்கும் காரியங்களையும் தேவர்கள் யுத்தத்தில் அடையும் அவமானங்களையும், மகேசுவரனுடைய திரிபுரதகனத்தையும், உண்டானவைகள் உண்டாகிறவைகள் நசிக்கிறதுகளுமாகிய எல்லாவற்றையும் கண்ணுற்ற இராமர் பயந்து அடிக்கடி நமஸ்கரித்தவுடனே தத்துவஞானத்தை அடைந்தவராகவுமானார். பிறகு உபநிஷத்துக்களுடைய சாராம்சமான அர்த்தங்களால் பரமசிவனைத் துதித்ததாவது:—அடிபணிந்த அடியார் அல்லல் அறுப்பவரே! ஜகதீசா! யாவராலும் நமஸ்கரிக்கப்படத்தக்கவரே! கங்காதரா! சந்

திரசேகரா! அநாதனுன என்னை சமுசாரபயத்திலி ருந்து கடைக்கணித்துக் காப்பாற்றும் !! காப்பாற் றும் !!! பூமியில் மரம், செடி, கொடி, புல், பூண்டு முதலியவைகளுண்டாகி எப்படி அதிலேயே யிரு ந்து அதிலேயே மடிகின்றதுகளோ அதுபோலவே ஓ, ஈசா! எப்போதும் உம்மிடமிருந்தே இவ்வுலக முண்டாகி இருந்து பிறகு உம்மிடத்தே லயமடை கின்றது. பிரமன், இந்திரன், விஷ்ணு, அக்கினி, மருத்கணங்கள், கந்தர்வர்கள், யக்ஷர்கள், சுரர்கள், சித்தகணங்கள், கங்கை முதலிய நதிகள், கடல்கள் இவையெல்லாம் உமது வாய்க்குள்ளிருக்கின்றன. ஓ, சந்திரசேகரா! உம்முடைய மாயையினுலே உண் டாக்கப்பட்டு உம்மிடத்தில் காணப்படுகிற இந்த ஜகத்தை ஜனங்கள் பிரமத்தால் முத்துச்சிப்பியில் வெள்ளியையும், பழுதையிற் பாம்பையும் காண்பது போல் காண்கிருர்கள். எல்லா உலகையும் உம்மு டைய தேஜஸினுல் பூர்ணஞ்செய்து சுவயம்பிரகாச ராயிருந்துகொண்டு பிரகாசிக்கச்செய்கிறீர். தேவா திதேவரான உமது பிரகாசமில்லாமல் இவ்வுலகமா னது நிமிஷகாலங்கூட காணப்படுகிறதில்லை. சிறிய ஓர் ஆதாரவஸ்துவானது பெரிய வஸ்துவை வகிக் காது. ஏனென்ருல் ஒரு அணுவானது விந்தயபரு வதத்தை தாங்குகிறதில்லை. உமது வாய்மாத்திரத் திலோ இப்பிரபஞ்சமிருக்கிறது. ஆனதால் அது

உமது மாயையால்தானென்றே நிச்சயிக்கிறேன். எப்படி கயிற்றில்தோன்றும் பாம்பு உண்மையில் அதில் உண்டாகாமலும், இராமலும், நாசமடையாமலும் பயத்தையுண்டாக்குமோ, ஓ, நீலகண்டா! மாயையினால் உருவம்பெற்ற இவ்வுலகம் உம்மிடத்தில் அவ்வாறே. உமது சரீரமானது உலகங்களுக்கு ஆதாரமாயிருக்கிறதென்பதுகூட ஆலோசித்துப்பார்த்தால் நிச்சயமாய் எனது அஜ்ஞானத்தினாற்றான். ஏனென்றால் நீர் எங்கும் நிறைந்த சச்சிதானந்தரூபியன்றோ! பூஜைகள், யாகம், குளம் வெட்டுதல் முதலான சிறந்த தருமம் இவைகளுடையபலனை அனுபவிக்கிறவர்களுக்குத் தக்க அந்த பலனை நீர் கொடுக்கிறீரென்ற வசனம் பொய்யே. ஏனென்றால், உம்மைத்தவிர வேறொன்றுங்கிடையாது. அஜ்ஞானத்தால் மூடர்களான ரிஷிகள் பூஜை உபசாரம் முதலான வெளிப்படையான கிரியைகளால் ஈசன் சந்தோஷத்தை யடைகின்றாரென்று சொல்வதும் பொய்யே. சரீரமில்லாத வுமக்கு சுகதுக்கானுபவத்தில் ஆசையேது? ஓ, ஈசா! நீர் வில்வ முதலிய ஓர் தளத்தையாவது அல்லது ஒருள்ளங்கை ஜலத்தையாவது ஏற்றுக்கொண்டு அவர்களுக்குத் திரைலோக்கிய சம்பத்தைக் கொடுக்கின்றீரென்ற இவையெல்லாம் அவித்தையாலே கல்பிக்கப்பட்டதென்று எண்ணுகிறேன். எட்டுத்திக்குகள், ஆகாயம்,

திரசேகரா! அநாதனுன என்னை சமுசாரபயத்திலி ருந்து கடைக்கணித்துக் காப்பாற்றும் !! காப்பாற் றும் !!! பூமியில் மரம், செடி, கொடி, புல், பூண்டு முதலியவைகளுண்டாகி எப்படி அதிலேயே யிரு ந்து அதிலேயே மடிகின்றதுகளோ அதுபோலவே ஓ, ஈசா! எப்போதும் உம்மிடமிருந்தே இவ்வுலக முண்டாகி இருந்து பிறகு உம்மிடத்தே லயமடை கின்றது. பிரமன், இந்திரன், விஷ்ணு, அக்கினி, மருத்கணங்கள், கந்தர்வர்கள், யக்ஷர்கள், சுரர்கள், சித்தகணங்கள், கங்கை முதலிய நதிகள், கடல்கள் இவையெல்லாம் உமது வாய்க்குள்ளிருக்கின்றன. ஓ, சந்திரசேகரா! உம்முடைய மாயையினுலே உண் டாக்கப்பட்டு உம்மிடத்தில் காணப்படுகிற இந்த ஜகத்தை ஜனங்கள் பிரமத்தால் முத்துச்சிப்பியில் வெள்ளியையும், பழுதையிற் பாம்பையும் காண்பது போல் காண்கிருர்கள். எல்லா உலகையும் உம்மு டைய தேஜஸினுல் பூர்ணஞ்செய்து சுவயம்பிரகாச ராயிருந்துகொண்டு பிரகாசிக்கச்செய்கிறீர். தேவா திதேவரான உமது பிரகாசமில்லாமல் இவ்வுலகமா னது நிமிஷகாலங்கூட காணப்படுகிறதில்லை. சிறிய ஓர் ஆதாரவஸ்துவானது பெரிய வஸ்துவை வகிக் காது. ஏனென்ருல் ஒரு அணுவானது விந்தயபரு வதத்தை தாங்குகிறதில்லை. உமது வாய்மாத்திரத் திலோ இப்பிரபஞ்சமிருக்கிறது. ஆனதால் அது

உமது மாயையால்தானென்றே நிச்சயிக்கிறேன். எப்படி கயிற்றில்தோன்றும் பாம்பு உண்மையில் அதில் உண்டாகாமலும், இராமலும், நாசமடையா மலும் பயத்தையுண்டாக்குமோ, ஓ, நீலகண்டா! மாயையினுல் உருவம்பெற்ற இவ்வுலகம் உம்மிடத் தில் அவ்வாறே. உமது சரீரமானது உலகங்களு க்கு ஆதாரமாயிருக்கிறதென்பதுகூட ஆலோசித் துப்பார்த்தால் நிச்சயமாய் எனது அஜ்ஞானத்தினு ற்ருன். ஏனென்ருல் நீர் எங்கும் நிறைந்த சச்சி தானந்தரூபியன்ருே! பூஜைகள், யாகம், குளம் வெட்டுதல் முதலான சிறந்த தருமம் இவைகளு டைய பலனை அநுபவிக்கிறவர்களுக்குத் தக்க அந்த பலனை நீர் கொடுக்கிறீரென்ற வசனம் பொய்யே. ஏனென்ருல், உம்மைத்தவிர வேருென்றுங்கிடை யாது. அஜ்ஞானத்தால் மூடர்களான ரிஷிகள் பூஜை உபசாரம் முதலான வெளிப்படையான கிரியைக ளால் ஈசன் சந்தோஷத்தை யடைகின்ருரென்று சொல்வதும் பொய்யே. சரீரமில்லாத வுமக்கு சுக துக்கானுபவத்தில் ஆசையேது? ஓ, ஈசா! நீர் வில்வ முதலிய ஓர் தளத்தையாவது அல்லது ஒருள்ளங்கை ஜலத்தையாவது ஏற்றுக்கொண்டு அவர்களுக்குத் திரைலோக்கிய சம்பத்தைக் கொடுக்கின்றீரென்ற இவையெல்லாம் அவித்தையாலே கல்பிக்கப்பட்ட தென்று எண்ணுகிறேன். எட்டுத்திக்குகள், ஆகாயம்,

பூமி இவையெங்கும் வியாபித்துநிறைந்த புராதனரா யிருக்கிறீர். குடமுடைந்தாலும் அதில் நிறைந்திரு க்கிற ஆகாயத்திற்கு நாசம் கிடையாததுபோல அவ்வுலகம் நாசமடைந்தாலும் உமக்கு யாதொரு நாசமுமில்லை. எப்படி ஆகாயத்திலுள்ள சூரியபிம் பமானது சலம் நிறைந்த பற்பல சிறிய பாத்திரங்க ளில் அனேக பிரதிபிம்பத்தின் தன்மையை அடை கின்றதோ அவ்வாறே நீரும் சகல பிராணிகளின் அந்தக்கரணங்களில் பிரதிபிம்பிக்கின்றீர். இவ்வுல கைப்படைத்துக்காத்து சங்கரிப்பதில் உமக்குச் செ ய்யவேண்டியதொன்றுமில்லை. அப்படியிருந்தபோ திலும் பிராணிகளுடைய அனுதிகளான கருமங்க ளால் இப்பிரபஞ்சத்தை சுவப்பனம்போல் செய்கி ன்றீர். ஸ்தூல, சூக்ஷ்மமாகிய இவ்விரண்டு ஜட சரீரங்களுக்கும் சித்து இல்லாது சுக துக்கங்கள் கிடையாது. ஆகையால் சுருதியானது சுகதுக்க ங்களை ஜீவரூபியான உம்மிடத்தில் எப்போதும் ஆரோபணம் பண்ணிச்சொல்லுகிறது. சச்சிதானந்த ரூபராயும், ஹம்ஸரூபராயுமிருக்கின்றவரேபோற்றி, நீலகண்டராயும், காலரூபியாயு மிருக்கிறவரே போ ற்றி, மித்தையான சித்தவிருத்தி ஒன்றினாலேமட்டும் போக்தாவானவருமாகியவரோபோற்றி! என்று இவ் வாறாக இரகுநந்தனன் ஈசனை தண்டனிட்டு, எதிரில் அஞ்சலிசெய்து நின்று, ஆச்சரியத்தோடு சொன்ன

தாவது:- "ஓ, பரமேசுவரா! உமது இவ்விசுவரூப த்தை அடக்கிக்கொள்ளும். ஜகத்து ஒரே ஆத்தும சுவரூபத்தைத்தவிர வேறில்லையென்று தேவரீர் அநுக்கிரகத்தா லறியப்பட்டது" என, ஓ, இராமா! என்னைத்தவிர வேறொன்றுங்கிடையாதுதானென்று பகவான் திருவாய்மலர்ந்தருளினார். சூதர்கூறுகின் றார்:—தேவதைமுதலானவர்களை ஈசன் தமது சரீ ரத்தில் அடக்கிக்கொள்ள,இராமர் சந்தோஷத்தால் கண்ணை மூடித்திறந்து பார்ப்பதற்குள்ளாக,மலையின் கொடிமுடியில் புலித்தோலி லுட்கார்ந்திருக்கிறவ ரும், ஐந்து முகத்தையுடையவரும், நீலகண்டரும், முக்கண்ணரும், புலித்தோலை யாடையாகவுடைய வரும், திருநீறு பூசிய சரீரமுடையவரும், சர்ப்பங் களாகிற கங்கணமுடையவரும், நாகங்களாகிற பூணூ லுடையவரும், புலித்தோலை மேலாடையாகக்கொ ண்டவரும், மின்னற்போன்ற செஞ்சடையையுடை யவரும், ஓரொருவரும், சந்திரனைச் சிரமேற்கொண் டவரும், எல்லோராலும் வேண்டத்தக்கவரும், அப யமளிப்பவரும், நான்குகைகளையுடையவரும், கண் டனக்கோடெறியையும், மானையும், கையிற் கொ ண்டவரும், எல்லாவுலகுக்கும் பதியாயிருக்கிறவரு மான ஈசுவரனைக்கண்டு வணங்கி அவரது கட்டளை யா லுட்கார, ஈசன்:-"ஓ, இராமா! நானன்றி உன க்கு வேறுகுரு கிடையாததால் இன்னும் எதேதுகள்

கேட்க விரும்புகின்றனேயோ அவைகளையெல்லாம் கேள்" எனத்திருவாய்மலர்ந்தருளினுர்.

ஏழாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 8-வது அத்தியாயம்.

## கர்ப்போத்பத்தி முதல் மரணம் வரையில்.

ஓ, ஜகதீசா! பாஞ்சபௌதிக தேகத்திற்கு உத்பத்தி, ஸ்திதி, லயம், சுவரூபம் இவையெப்படி? கூறவேண்டும் என இராமர் பிரார்த்திக்க, ஸ்ரீபகவான் சொல்வாராயினுர்:— "இச்சரீரம் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயமென்கிற பஞ்ச பூதங்களால் அமைக்கப்பட்டதால் பாஞ்சபௌதிகமெனப்படும். அவற்றுள் முக்கியபாகம் பிருதிவி, மற்றவைகள்கூட உதவியாயிருக்கின்றன. இப்பாஞ்சபௌதிக சரீரம், ஜாரயுஜம், அண்டஜம், ஸ்வேதஜம், உத்பிஜம் என நான்கு வகைப்படும். மானஸமென்ற மற்றொரு சரீரமுண்டு. அது தேவாதிகளுக்கு உரியது. அவற்றுள் ஜாராயுஜம் முக்கியமாகையால் அதை முதலிற் சொல்லுகிறேன். சுக்கில சோணிதங்கள் சேர்ந்து உண்டாவதே ஜாராயுஜமெனப்படும். ருதுகாலத்தில் ஸ்திரீகளின் கருப்பப்பையில் சுக்கிலமானது பிரவேசிக்கும்போது ஸ்திரீகளின் சோணிதத்தோடு கலந்தால் அதுவே ஜாரா

யுஜம். சோணிதம் (ரஜஸ்) ஜாஸ்தியானல் பெண்ணுகிறது. சுக்கிலம் அதிகரித்தால் ஆணுகிறது. சுக்கில சோணிதம் இரண்டும் சமமானல் அலியாகிறது. ஸ்திரீகள் ஒவ்வொரு தடவைகளிலும் புஷ்பிணியாய் நான்காவது நாளில் ஸ்நானஞ்செய்து பரிசுத்தமாகியும், பிறகு பதினுறுவது இரவு வரைக்கும் ருதுகாலமென்று சொல்லப்படும். அவற்றுள் ஒற்றைப்பட்டநாளில் கருப்பம் தரித்தால் பெண்ணுகவும், இரட்டைப்பட்டநாளில் கருப்பம் தரித்தால் ஆணுகவும் பிறக்கிறது. பதினுரும் நாளில் கருப்பம் தரித்தால் அக்கருப்பமானதுசக்கிரவர்த்தியாகச்சனிககும். அதில் சந்தேகமேயில்லை. ருதுஸ்நானஞ்செய்து காதலுடன் எந்தப் புருஷனுடைய முகத்தைப் பார்க்கின்ருளோ அப்புருஷனுக்குச் சமானமாகிய உருவம் அக்கருப்பம் அடையும். ஆகையால் கணவன் முகம் பார்க்கவேண்டும். ஸ்திரீயினது மெலிதான தோலின் மூடி (பை) க்கு ஜராயு என்று பெயர். அதில் சுக்கில சோணிதம் சேருகிறபடியால் கருப்பமுண்டாகிறது. அப்படி யதில் கருப்பமுண்டாவதால்தான் ஜராயுஜமென்று சொல்லப்படும்.

அண்டஜங்கள் (முட்டையி லுண்டாகிற வைகள்):—பக்ஷி, சர்ப்பம் முதலியன. ஸ்வேதஜங்கள் (புழுக்கத்தின லுண்டாகிறவைகள்) :—கொசு முதலி

யவைகள். உத்பிஜங்கள் (பூமியைப்பிளந் துண்டா கிறவைகள்) :—மரம், செடி, புல், பூண்டு முதலியன. மானஸர்கள் (மனஸ் ஸங்கர்ப்பத்தால் சிருஷ்டிக்கப் படல்) :—தேவர்கள், ரிஷிகள்.

ஜன்ம கரும வசத்தால் யோனியில் விடப்ப ட்ட சுக்கிலமானது ரஜஸோடு கூடி முதல் மாதத் தில் முதலில் *திரவமாகவும், பிறகு, புத்புதமாகவும, கலலமாகவும், அதன்பின், பேசியாகவுமாகிறது.

இரண்டாவது மாதத்தில் அப்பேசி கெட்டி யாகி மாமிச பிண்டமாகவாகிறது.

மூன்றாவது மாதத்தில் கால், கை, சிரசு முத லிய அவயவங்க ளுண்டாகின்றன.

நான்காமாதத்தில் ஜீவனுடைய பிரகாச முண் டாகும்.

தாயின் வயிற்றிலிருந்தபோதிலும் அக்கருப்பம் அசை கிறது. ஆணுகில் வயிற்றின் வலது புறத்திலும், பெண்ணு கில் இடதுபுறத்திலும், அலியாகில் வயிற்றின் நடுவிலுமிரு க்கிறது. ஆகையாற்றான், மாதா புருஷ கருப்பமாயிருந் தால் வலதுபுறமாகப் படுக்கிறாள். ஜனனகாலத்திற்குப் பிறகு உண்டாகிற பற்கள் முகரோமங்கள் முதலியவை தவிர மற்ற அங்கப் பிரத்தியங்க பாகங்கள் அப்பொழுது

---

* திரவம்-ரொம்ப இளகல், புத்புதம்-நீர்க்கொப்பளம், கலலம்-இளகலான மாமிசம், பேசி-முட்டையின்தன்மை.

ஏககாலத்தில் சூக்ஷ்மமாயுண்டாகும். இதுதான் பிரகிருதியானது. மற்றதோ, விகுருதி யென்பது மேலோர் கொள்கை.

நான்காவது மாதத்திலேயே புருஷர்களுக்கு சஞ்சலமில்லாமை முதலிய மனோதருமங்களும், ஸ்திரீகளுக்கு பயம் முதலிய மனோதருமங்களும், நபும்ஸகத்திற்கு இவ்விரண்டின் கலப்பு முண்டாகும்.

ஓ, இரகுசிரேஷ்டா! மாதாவினிடமிருந்து உண்டான அதன் இருதயம் தனக்குவேண்டியவற்றை அவள் மூலமாய் விரும்புகிறதாகையால் அம்மாதாவினுடைய மனோபீஷ்டத்தை அக்கருப்பத்தின் அபிவிருத்தியின் பொருட்டு பூரணஞ்செய்யவேண்டும். இதனாற்றான் கருப்பமுள்ள ஸ்திரீயை இரண்டு இருதயம்பெற்றவளென்று சொல்லுகிறார்கள். அக்கருப்பிணிக்கு மசக்கையால்வேண்டும் பண்டங்களைக் கொடாவிடில் கருப்பத்திற்கு அங்கஹீனம் முதலியதுண்டாகும். தாயிக்கு எவ்விஷயத்தில் ஆசையோ அதனால் அக்கருப்பத்தின் குழந்தையும் பீடிக்கப்பட்டதாயிருக்கும்.

ஐந்தாவது மாதத்தில் கருப்பத்திற்குச் சித்த விருத்தியும் இரத்த புஷ்டியும் நன்றாயுண்டாகும்.

ஆறாவது மாதத்தில் எலும்பு, நரம்பு, நகம், கேசம், உரோமம் இவைகள் நன்றாயுண்டாகும்.

எழாவது மாதத்தில் பலம், நிறம் விருத்தியாகி அங்கங்கள் பூரணமாகிவிடும்.

அக்கருப்பமானது இருகால்களின் நடுவில் அகப்பட்ட கைகளினாலே காதை மூடிக்கொண்டு கருப்பத்தில் வசிக்கின்றமையால் மிகத்துயரமுற்று பயத்துடன் கூடியிருக்கும். இப்படி கருப்பதுக்கம் முதலியவைகளோடு கூடிய இது ஆ! கஷ்டமென்று ஒழிவடைந்து சித்தத்தை சோகத்தோடுகூடினதாகச் செய்கின்றது. வெகு நுட்பமான ஸ்தானத்தை பிளக்கும்படியானதும், மிகச் சகிக்கமுடியாததும் துன்பத்திற்கெல்லாம் இருப்பிடமுமான காய்ச்சப்பட்ட கரம்பவாலுக யந்திரங்களால் முன் பலமுறை தீவினையால் தகிக்கப்பட்டேன். இப்பவும் ஜாடராக்கினியால் கொதிப்புற்ற பித்தநீர்த் திவிலைகள், கருப்பப்பையில் மூழ்கின என்னை மிகவும் தகிக்கின்றதே. கைரம்பங்களுக் கொப்பான பார்சுவ எலும்புகளால் உபத்திரவப்படுத்தப்பட்டு துயரமுற்றிருக்கின்ற என்னை வயிற்றிலுண்டான புழுக்களுடைய முள்ளிலவை முட்போன்ற முகங்களும் வருத்தப்படுத்துகின்றதே. துர்நாற்றத்தால் நிறைந்து ஜாடராக்கினியால் பொசுக்கப்பட்ட கருப்பத்தில் நானடையும் துன்பத்தைக்காட்டிலும் கும்பீபாகத்திலுண்டான துக்கம் மிகத் தாழ்ந்ததே. சீழ், இரத்தம், கபம் முதலியவைகளை யுண்டல், கக்கினதைத் திரும்பப் புசித்தல், மல மூத்திராதிகளுக்கு ஸ்தானமாகிய அசுத்தவிடத்தில் புழுப்போலிருத்தல் இவை யெல்லாம் கருப்பவாசியான என்னால் அனுபவிக்கப்படுகிறது. கருப்பசயனத்திலிருந்து என்னால் அனுபவிக்கப்படுகிற துக்கம் சகல நரகங்களிலுமுள்ள மகா துக்கங்களைக்காட்டிலும் அதிகமாயிருக்கிறது. இவ்வாறே முந்தின ஜன்மங்களிலும் நானாவித யோனிகளில் பற்பல யாதனைகள் அனுபவிக்கப்பட்டனவென்று இவ்வாறு நினைந்து மோக்ஷமடையும் வழியை யோஜித்து பிறந்தபின்னும்

அதையே அப்பியாசப்படுத்தவேண்டுமென்ற கவலை கொண்டிருக்கும்.

எட்டாவது மாதத்தில் சப்தம் ஸ்பரிசமாகிய இந்திரியங்களும், இருதயத்தில் ஓஜஸும் தேஜசுமுண்டாகின்றது.

வெளுப்பாயும், பொற்கொன்னை வரணமாயும், சிவந்தசாயுமுள்ள கருப்பந்தான் பிராணதாரண நிமித்தமாகிறது. சஞ்சலமாகிய அக்கருப்பமானது ஓடும். எட்டாவது மாதத்தில் பிறந்தால் அச்சிசுவானது பலமில்லாமல், பிழைத்திராது. கரும வாசனையிருந்தால் பீடிக்கப்பட்ட அங்கங்களையுடையவன்போல் கொஞ்சகாலமிருக்கும்.

ஒன்பதாவது மாதம் முதற்கொண்டு பிரஸவத்திற்குக் காலமாயிருக்கும். கருப்பத்தின் தொப்புள் கொடியின் நாடியானது தாயின் இரத்த நாடியை ஒட்டித் திரும்பிவருவதால் மாதாவினது உணவின் ரஸங்களை உட்கொள்ளுகிறது. அதனால் கருப்பமும் தாயின் உணவால் போஷிக்கப்பட்டு ஜீவித்திருக்கிறது. எலும்பு எந்திரத்தினால் நெருக்கப்பட்டு, யோனிமார்க்கமாய் வெளிப்பட்டு, கொழுப்பு இரத்தம் இவற்றால் அவயவங்களெல்லாம் பூசப்பட்டு தொன்னைபோன்ற ஜராயுவென்ற கருப்பப்பையால் போர்க்கப்பட்டு அதோமுகமாய் வெளிப்பட்டு உரக்க அழுதுகொண்டு விழுகிறது. இவ்வாறு எந்திரத்தினின்று வெளிப்படும் சிசுவானது

மல்லார்ந்து படுத்தாற்போல் கீழே விழுகிறது. ஒன்றுமில்லாமல் (பிறக்கும்போது ஒன்றுங் கொண்டு வராமல்) மாமிச பிண்டம்போல் கிடக்கும் அச்சிசுவானது சிங்கப்பற்களையுடைய நாய், பூனை முதலிய துஷ்ட மிருகங்களின் உபத்திரவமில்லாமல் தடியைக் கையிலுடைய ஜனங்களால் இரக்ஷிக்கப்படுகிறது. அறிவின்மையால் அது இராக்ஷஸனைப்பிதாப்போலவும், டாகினியைத் தாய்போலவும், சீழைப் பால்போலவும் எண்ணுகின்றமையால் இச்சிசுத்தனம் நீண்ட கஷ்டமுள்ளது. எதுவரையில் சுழுமுனையானது சிலேஷ்மாவால் மூடப்பட்டிருக்கிறதோ அதுவரையில் தெளிவான வர்ணங்களோடு பேசமுடிகிறதில்லை. ஆகையால், கருப்பத்திற்கூட சிசுவுக்கு அழும் சக்தியில்லை.

யௌவனமடையவே மிகக் கொழுப்படைந்து காமஜ்வரத்தால் பீடிக்கப்படுகிறான். காரணமில்லாமல் உரக்கப் பாடுகிறான்; திடீரென்று குதிக்கிறான்; வேகமாக மரங்களிலேறுகிறான்; அமைதியுள்ள ஸாதுக்களைப் பயமுறுத்துகிறான்; காமம், குரோதம், மதம் இவைகளால் பொட்டையாக இருந்துகொண்டு ஒருவரையும் இலக்ஷியஞ்செய்கிறதில்லை. கேவலம் மாமிசம், நரம்பு இவைகளால் நிறைந்த ஸ்திரீயினுடைய துர்நாற்றமுடைய யோனியில் அதிக ஆசைவைத்து மன்மதபாணங்களால் பொ

சுக்கப்படுகிறான். ஸ்திரீயினுடைய சரீரத்தில் எலும்பு, மாமிசம், நரம்பு, தோல் இவைகளைத்தவிர வேறென்ன இருக்கிறது. இவ்வாறிருக்க, மாதர்களது மாயையினால் மதிமயங்கி ஒன்றையும் கவனிக்கிறதில்லை. மான்விழி மாதர்களின் சரீரமானது, இப்பிராணவாயுவானது வெளிப்புறப்பட்டவுடன் எப்படியாகிறது பார்! கஷ்டம்! ஐந்து ஆறு தினங்கூட பார்க்கும்படியா யிருக்கிறதில்லையே.

மிகவும் அவமானத்திற்கேதுவாகிய கிழத்தனத்தை யடைந்து அதிகத் துயரமுற்று, கபத்தால் மார்படைக்கப்பட்டும், உட்கொண்ட உணவு ஜீரணமாகாமலும், பற்களுதிர்ந்தும், நன்றாய்க் கண்தெரியாமல் பார்வையின் சக்தி குறைந்தும், ஒரப்பாயும் புளிப்பாயும், துவர்ப்பாயும் புசித்தும், வாயுவினால் இடுப்பு, கழுத்து, கை, தொடை, கால், இவ்வவயவங்கள் கூனிக் குறுகியும், பலமில்லாமலும், பதினாயிரம் வியாதிகளால் பீடிக்கப்பட்டும், பந்துக்களால் அவமதிக்கப்பட்டும், பரிசுத்தமில்லாமலும், மலத்தால் ஸர்வாங்கமும் பூசப்பட்டும், மனைவியர்கள் சிறுவர்களாயின் அவர்களை ஆலிங்கனமட்டும் செய்துகொண்டும், கிட்டாத போகங்களை எப்போதும் நினைத்து கேவலம் சஞ்சலப்படுகிறதுமாகவே இருப்பான். சகல இந்திரியங்களுடைய சக்தி குறையவே சிறுவர்களால் பரிகாசம் செய்யப்படுகிறான்.

மரணவேதனைக்கோ திருஷ்டாந்தமே யில்லை. சகிக்கமுடியாத அதிகமான வியாதியை அனுபவித்தாலுங்கூட பிராணிகள் சாவென்றால் பயப்படுகிறார்கள். சமுத்திரமத்திய ஜலத்திலிருக்கும் சர்ப்பமானது கருடனால் தூக்கப்படுவதுபோல் பந்துக்களால் சூழப்பட்டிருந்தும் ஜீவன் எமனால் கொண்டு போகப்படுகிறான். சர்ப்பத்தினால் பிடிக்கப்பட்ட தவளையைப்போல், ஓ,மனைவியே! தனமே! குழந்தைகளே! என்று பயங்கரமாய்க் கதறுகிற மனிதன் மிருத்தியுவினால் கொண்டுபோகப்படுகிறான். பிராணன் போகும்போதும், மர்மஸ்தானங்கள் பிளக்கப்பட்டு பூட்டுகள் விடுபட்டுப் போகும்போதும் சாகிறவனுக்குண்டாகும் துன்பம் எவ்வாறிருக்குமென்பதை மோக்ஷமடைய விரும்புகிறவர்கள் நன்றாய் ஆலோசித்துப் பார்க்கவேண்டும். அறிவழிந்து பார்வையிழந்து எமபாசத்தாற்கட்டுண்டவனைக் காப்பவர் கிடைப்பதேயில்லை. அஜ்ஞானமாகிய இருளில்மூழ்கிய அவன், பந்துக்களால் கூப்பிடப்பட்டும், பேசச்சக்தியின்றி களைப்படைந்த பார்வையால் பார்க்கிறான். ஒருபக்கத்தில் எமன் இரும்புப்பாசத்தால் இழுக்க, மறுபக்கத்தில் புத்திர மித்திராதி பந்துக்கள் ஸ்னேகபாசத்தாலிழுக்க தான் மத்தியிலகப்பட்டுக்கொண்டு விழிக்கிறான். மேலும், விக்கலால் வாதிக்கப்பட்டும், சுவாசத்தால் நெஞ்சு முதலிய

வைகள் உலர்ந்தும், மிருத்தியுவினால் இழுக்கப்பட்டுமிருக்கிற அவனுக்கு இக்கேட்டினின்றும் தப்பித்துக்கொள்ளும் இடம் கிடையாது. சம்ஸாரம் (பிறப்பு இறப்பின் பரம்பரை) என்ற இயந்திரத்திலேறினும், எமதூதனால் அதிகாரம் செய்யப்பட்டு இனி எங்குபோகப் போகிறோமோவென்று மிகத்துயமுற்று, எமபாசத்தால் கட்டுண்டு, என்செய்வேன், எங்கு போவேன், எதை எடுப்பேன், எதைவிடுவேனென்று இவ்வாறாகப் புலம்பிக்கொண்டு, இனி இன்னது செய்வதென்று ஒன்றும்தோன்றாமல் கடைசியாய் அதிக வருத்தப்பட்டு இத்தேகத்தினின்று பிராணனை விடுகின்றான். உடனே எம தூதர்கள்வசப்பட்டு யாதனாசரீரத்தையடைந்து, இங்கிருந்து சென்று, அனுபவிக்கவேண்டிய எமயாதனைகளையெல்லாம் அனுபவிப்பதில் அடையும் துயரத்தை வாயினாற் சொல்லவுங் கூட ஒருவனும் சகிக்கமாட்டான். எச்சரீரமானது பச்சைக் கற்பூரம், வாசனைச்சந்தனம் முதலியவைகளால் எப்போதும் பூசப்பட்டும், அனேகவகை ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டும், நல்ல வஸ்திரங்களால் கட்டப்பட்டுமிருந்ததோ, அச்சரீரமானது ஜீவன் பிரிந்தபின் தொடத்தகாததும், பார்க்கத்தகாததுமாய் இருக்கிறதுமன்றி, சற்று நேரம்கூட வீட்டில் வைக்காமல் வெளியிற்கொண்டுபோய் கட்டைகளால் பொசுக்கப்ப

ட்டு நொடிப்பொழுதில்சாம்பலாய்ச் செய்யப்படுகி றது; அல்லதுநரி, கழுகு, நாய், கோழி,காகம்முதலிய வைகளால் பிடுங்கி தின்னப்படுகிறது. எவ்வளவு கோடிஜன்மமெடுத்த போதிலும் பிறகுஅதே உருவம் காணப்படுகிறதில்லே. என்னுடைய தாய், தந்தை, குரு, சுற்றத்தாரென்று இம்மாயாமய வுலகில் யாருக் குத்தான் மெய்நம்பிக்கை யுண்டாகும்.ஏனென்றால், இவன் பரலோகத்திற்குப் போகுங்கால் தன் நல்வி னைதீவினை மட்டில் வழித்துணையாகிறதே யன்றிவே றுயாதும் வருகிறதில்லையே! இச்சீவலோகமானது சிரமபரிகாரஞ்செய்து கொள்ளும் விருக்ஷத்திற்குச் சமானமாயிருக்கிறது. ஒவ்வொரு சாயங்காலமும் பக்ஷிகள் விருக்ஷத்தில் ஒன்று சேர்ந்து அடைந்து மறுநாட்காலையில் அவ்விருக்ஷம் விட்டுக்கிளம்பி அததன் காரியவசத்தால் தனித்தனி செல்வதெ வ்வாறோ அவ்வாறே பந்து மித்திராதிகள் சேருவ தும் பிரிவதுமாம். இறப்புக்குக் காரணம் பிறப்பும், பிறப்புக்குக் காரணம் இறப்புமாய் இடைவிடாது காலயந்திரம் போல் மனிதன் இரவுபகலாய் அடிக் கடி சுற்றுகிறான். கருப்பத்தில் சுக்கிலம் விழுந்தது முதல மரணம் வரையிலுள்ள, சொல்லப்பட்ட இச் சமுசார மகா வியாதிக்கு என்னைத் தவிர வேறு மரு ந்து இடையாது.

எட்டாவது அத்தியாயம் முற்றிற்று.

## 9-வது அத்தியாயம், சரீரநிரூபணம்.

ஸ்ரீ பகவான் கூறுகின்றார்:— ஓ, அரசனே! சரீரசுவரூபத்தையுரைக்கின்றேன், ஜாக்கிறதையாய்கேள். இவ்வுலகமானது என்னிடத்திலுண்டாகி என்னாலேயேதரிக்கப்பட்டு, என்னிடமே நாசத்தை யடைகின்றன. ஆனாலது முத்துச்சிப்பியினிடத்தில் பிரமத்தால் வெள்ளி தோன்றி, இருந்து, லயமடைவது போலொத்ததே யொழிய உண்மையிலில்லை. நானோ, எங்கும் நிறைந்தவனும், நிர்மலனும், ஸச்சிதாநந்தசுவரூபனும், பற்றுதலற்றவனும், அகங்காரமற்றவனும, சுத்தனும், என்றுமுள்ள பிரும்மசுவரூபியுமாயிருக்கின்றேன். ஆனால், அனாதியான அவித்தையுடன்கூடி ஜகத்திற்குக் காரணமா யிருக்குந்தன்மையையடைகின்றேன். அம்மகா அவித்தையோ ஸத்துவம், ரஜஸ், தமஸ் என்ற முக்குண முள்ளதாயும், பிரபஞ்சமாக பரிணமிக்கும தன்மையுள்ளதாயும், ஒரு விதமாயும் நிரூபணஞ்செய்ய முடியாததாயுமிருக்கிறது.

ஸத்துவ குணமானது வெளுப்பானதாயும், மனிதர்களின் சுகத்துக்கும், ஞானத்துக்கும் காரணமாயுமிருக்கிறது. ரஜோகுணமானது, சிவப்பு நிறமுள்ளதாயும், சஞ்சலமாயும், துக்கத்துக்குக்காரணமாயுமிருக்கிறது. தமோகுணமானது கறுத்த

கிறமுள்ளதாயும், ஜடமாயும், சுகம் முதலியவைக ளில் உதாசீனமாயுமிருக்கிறது. ஆகையால், அந்த முக்குணமுள்ள மாயாசக்தியானது எனது சம்மந் தத்தால் அதிஷ்டானமாகி என்னிடத்தில் கிளிஞ்ச லில் வெள்ளி போலவும், பழுதையிற் பாம்பு போல வும் பிரபஞ்ச உருவையடைகிறது. மாயையினுற் றூன் ஆகாயம் முதலிய பஞ்சபூதங்களுண்டாகின்ற ன. அப்பூதங்களால் இச்சரீரமுண்டாகிறபடியால் பாஞ்சபௌதிகமெனப்படும்.

தாய் தந்தைகள் உட்கொள்ளும் உணவினுல் ஆறுகோசத்தையுடைய சரீரமுண்டாகிறது. நர ம்பு, எலும்பு, ஊந்தண்ணீர் இவைகள் பிதாவினிட த்திலிருந்தும், தோல், மாமிசம், இரத்தம் இவைக ள்தாயினிடத்திலிருந்து முண்டாகின்றன.

முக்கியமாய் மாதாவினிடமிருந்து ஆறுபதா ர்த்தங்களும், பிதாவினிடமிருந்து ஆறுபதார்த்தங் களும், அன்னபானுதிரஸங்களால் ஏழுபதார்த்தங்க ளும், ஆத்துமா (அந்தக்கரணம்) விலிருந்து ஏழுப தார்த்தங்களும், ஸ்வாத்மஜமான பதார்த்தம் சிலது முண்டாகின்றன.

இரத்தம், கொழுப்பு, ஊந்தண்ணீர், (பிலீ ஹம், யகிருத்து), குதம், இருதயம், தொப்புள் இவைமுதலிய மிருதுவான பதார்த்தங்கள் மாதவி

னிடமிருந் துண்டாகின்றன. (முகரோமம், தலை மயிர், மற்ற சரீரமயிர்), சின்ன நரம்பு, இரத்த நரம்பு, பெரிய நரம்பு, நகங்கள், பற்கள், சுக்கிலம் இவை முதலிய சற்று கடினமான பதார்த்தங்கள் பிதாவினிடமிருந் துண்டாகின்றன. சரீரத்தின் (புஷ்டி, நிறம், விருத்தி), திருப்தி, பலம், நிலைமை, சாபல்லிய மின்மை, உற்சாகம் இவை முதலியன அன்னபானுதி ரஸங்களாலுண்டாகின்றன. (இச்சை, பகை), (சுகம், துக்கம்), (தருமம், அதருமம்), பாவனை, பிரயத்தினம், ஞானமின்மை முதலியன ஆத்துமாவிலிருந் துண்டாகின்றன. ஆயுள், இந்திரியங்கள் இவை முதலியன ஸ்வாத்துமஜங்கள்.

செவி, மெய், கண், வாய், மூக்கு ஆகியவைந்தும் ஞானேந்திரியம் (பொறி) எனப்படும். ஓசை, ஊறு (பரிசம்), ஒளி, சுவை, நாற்றமாகிய இவ்வைந்தும், ஞானேந்திரிய விஷயங்கள் (புலன்). வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபஸ்தம் இவ்வைந்தும் கருமேந்திரியங்களெனப்படும். பேசல், நடை, எடுத்தல், விடுதல், இரதி இவ்வைந்தும் முறையே கருமேந்திரியங்களின் தொழில்கள்.

அந்தக்கரணமென்பது மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என நான்கு வகைப்படும்.

அவற்றுள், மனதின் விஷயங்கள் சுகதுக்கங்களாம். அதின்தொழில்கள் நினைவு, பயம், விகற்பம் முதலியன. நிச்ச

யரூபமான அந்தக்காரணவிருத்தியானது புத்தி எனப்படும். நான், எனது என்னும் அந்தக்கரண விருத்தியானது அகங்காரம் எனப்படும். தேகாபிமானத்தோடு கூடிய ஸைசதன்னியத்தைச் செய்வதால் சித்தம் என்னப்படும்.

ஸத்துவ குணமாயையால் பரிணமிக்கப்பட்ட அந்தக்கரணமானது ஸாத்துவீகம், ராஜஸம், தாமதமென மாயாகுணபேதத்தால் மூன்று விதப்படும்.

பரலோக முண்டென்றமதி, பரிசுத்தி, தருமத்தில் மிக அன்பு இவை முதலிய ஸாத்துவீக குணங்கள் ஸத்துவகுணத்தாலுண்டாகின்றன. இரஜோகுணத்திலிருந்தும் காமம், குரோதம், மதம் முதலிய இராஜஸபதார்த்தங்களுண்டாகின்றன. தமோகுணத்திலிருந்தும் நெடுந்துயில், சோம்பு, மௌட்டியம், வஞ்சம் முதலிய தாமத பதார்த்தங்களுண்டாகின்றன. பொறிகளின் தெளிவு, பிணியின்மை, சோம்பலின்மை முதலியது ஸத்துவஜங்களென்று சொல்லப்படுகிறது. இச்சரீரம் பஞ்சபூதங்களால் அமைக்கப்பட்டிருப்பதால் அவைகளின் குணங்களை கிரகிக்கின்றது.

அவற்றுள், ஆகாயத்தினிடமிருந்து, சப்தம், சப்த இத்திரியம், சப்தத்தோடு கூடியிருத்தல், விசித்திரமா யிருத்தல், சூக்ஷ்மம், தைரியம், பலம் இவைகளை தேகமானது கிரகிக்கின்றது.

வாயுவினிடமிருந்து, பரிசமும், பரிசேந்திரியமும், உயரத்தூக்கல், கீழே போடல், மடக்கல், நடை, நீட்டல் என்ற ஐந்து விதத் தொழிலும்,

உலர்ந்திருத்தலும், பிராணம், அபானம், வியானம், உதானம், ஸமானமென்ற ஐந்து முக்கிய பிராணன்களும், நாகம், கூர்மம், கிருகிரம, தேவதத்தம், தனஞ்சயமென்ற ஐந்து உபபிராணன்களும், இலேசாயிருத்தலும் ஆகிய இவைகளையெல்லாம் தேகமானது கிரகிக்கின்றது.

மேற்கூறியவைகளில் மிகவும் முக்கியமாகிய பிராணனென்பது நாபிமுதல் கழுத்துவரையிலிருந்து, நாசி, நாபி இருதய கமலம், இவைகளில் சஞ்சரித்துக்கொண்டு, பேச்சு, வெளிமூச்சு, உள்மூச்சு இவைகளுக்குக் காரணமாயிருக்கின்றது.

அபானமென்பது, குதம், ஆண்குறி, இடை, முழந்தாள்கள், வயிறு, தொப்புள், விருஷணம், கணுக்காலாகிய இவைகளிவிருந்துகொண்டு, மலமூத்திராதிகளை, வெளிப்படுத்தும் தொழிலையுடையதா யிருக்கிறது.

வியானமென்பது, கண், காது, பாதங்களின் பரடுகள் நாவு, நாசி இவைகளிவிருந்துகொண்டு, ரேசகம் (சுவாசத்தை வெளிவிடல்), பூரகம் (உட்கொள்ளல்), கும்பகம் (உள்ளேயே நிருத்திவைத்தல்) முதலிய தொழிலை யுடையதாயிக்கிறது.

உதானமென்பது கால், கை, அவயவங்களின் சந்தி இவைகளிலிருந்து, சரீரத்தை எழும்பச் செய்தல், பாய்தல் முதலிய தொழிலைச் செய்கின்றது.

ஸமானமென்பது அக்கினியுடன் கூட சரீரமுழுவதும் பரவி எழுபத்தீராயிரம் நரம்புகளின் துவாரங்களிலும் சஞ்

சரித்து, உட்கொள்ளும் அன்னபானுதிரஸங்களை எங்குஞ் செலுத்தி சரீரத்திற்குப் புஷ்டியைச் செய்கிறது.

. நாகன் முதலிய ஐந்து உபபிராண்கள் தொக்கு முதலிய எழுதாதுக்களை ஆசிரயித்திருக்கின்றன. அவற்றுள், நாகத்திற்கு எப்பம் முதலியதும், கூர்மத்திற்கு இமை கொட்டல் முதலியதும், கிருகிரத்திற்கு பசி தாக முதலியவைகளும், தேவதத்தத்திற்கு சோம்பல் முதலியதும், தனஞ்சயத்திற்கு சோகம் முதலியதுமாம்.

தேயுவினிடமிருந்து, நேத்திரேந்திரியம், ரூபம், உஷ்ணம், ஜீரணசத்தி, பிரகாசமாயிருத்தல், கோபம், குரூரமாயிருத்தல், சூஷ்மம், ஓஜஸ் (இந்திரியங்களின் வலிமை), பிரதாபம், சூரத்தனம், புத்திசாலித்தனம், இவைகளை தேகமானது கிரகிக்கிறது.

அப்புவினிட மிருந்து, இரஸ னேந்திரியம், உருசி, குளிர்ச்சி, கொப்பு, திரவம், வியர்வை, மெது இவைகளை தேகமானது கிரகிக்கிறது.

பிருதிவியினிட மிருந்து, கிராணேந்திரியம், நாற்றம், உறுதி, தைரியம், கனதி இவைகளை தேகமானது கிரகிக்கிறது.

- தோல், இரத்தம், மாமிசம், ஊந்தண்ணீர், எலும்பு, மஜ்ஜை, சுக்கிலமாகிய இவ்வேழும் தாதுக்களெனப்படும்.

மனிதர் புசிக்கும் அன்னமானது ஜாடராக்கினியால் மூன்று விதமாயாகிறது. அவற்றுள், ஸ்தூலபாகம் மலமாகவும், மத்திமபாகம் மாமிசமா

கவும், சூக்ஷ்மபாகம் மனதாகவுமாகின்றது. ஆகையால் மனது அன்னமயமென்று சொல்லப்படுகிறது.

குடிக்கப்பட்ட நீரின் ஸ்தூலபாகம் மூத்திரமும், மத்திமபாகம் இரத்தமும், சூக்ஷ்மபாகம் பிராணனுமாக வாகின்றது. ஆகையால் பிராணன் ஜலமயமென்று சொல்லப்படுகின்றது.

தேஜஸின் ஸ்தூலபாகம் எலும்பாகவும், மத்திமபாகம் மஜ்ஜையாகவும், சூக்ஷ்மபாகம் வாக்காகவுமாகின்றது. ஆகையால்தான் ஜகத்தானது பிருதிவி, அப்பு, தேயு சுவரூபமாகிறது.

இரத்தத்தால் மாமிசமும், மாமிசத்தால் மேதசும், மேதஸால் எலும்பும், எலும்பால் மஜ்ஜையுமுண்டாகின்றன. மாமிச பிண்டத்திலிருந்து நாடிகளும், மஜ்ஜையிலிருந்து சுக்கிலமுமுண்டாகின்றன. வாதம், பித்தம், கபம் இம்மூன்றும் தாதுக்களேயாம்.

10 பங்கு ஜலம். 9 பங்கு இரஸம், 8 பங்கு இரத்தம் 7 பங்கு மலம், 6 பங்கு கபம், 5 பங்கு பித்தம், 4 பங்கு மூத்திரம், 3 பங்கு வசை, 2 பங்கு மேதசு, 1 பங்கு மஜ்ஜை, $\frac{1}{2}$ பங்கு சுக்கிலம் ஆகிய இவைகள் பலமென்று சொல்லப்படுகிறது.

சரீரத்தில் 360 எலும்புகளிருக்கின்றன. அவ்வெலும்புகள், ஜலஜம், கபாலம், ருசகம், ஆஸ்தாணம், நளிகம் என்ற ஐந்துவிதங்களென்று சொல்லப்படும். அவற்றுள், எலும்புச்சந்திகள் 210 இருக்

கின்றன. சரீரத்திலுள்ள அவ்வெலும்புகள் ரௌரவம், பிரஸரம், ஸ்கந்தஸேசனம், உலூகலம், சமுத்திரம், மண்டலம், சங்காவர்த்தம், வாமனகுண்டலமென எட்டு வகைப்படும்.

தேகத்திலுள்ள உரோமங்கள் $3\frac{1}{2}$ கோடியும், முகத்திலும் தலையிலுமுள்ள மயிர்கள் 3 லக்ஷமுமாம்.

ஓ, இரகுசிரேஷ்டா! இவ்வாருகத் தேகத்தின் சுவரூபம் உனக்கு நன்ருயுரைக்கப்பட்டது. இம்மூன்றுலகிலும் எந்தவஸ்துவைக்காட்டிலும் தாழ்ந்த பதார்த்தங்கிடையாதோ அப்பேர்க்கொத்த இழிவான இச்சரீரத்தில் தீவினையால் நான், எனது என்ற ஆத்தும பாவனையால், மகாமகிமைபொருந்திய மோக்ஷோபாயத்தில் புத்தி நாடதவர்களாகச் செய்யப்படுகிருர்கள். கஷ்டம்! கஷ்டம்!! ஆகையால் புத்திசாலியாகிய நீ இந்தேக சுவரூபத்தை நன்காராய்ந்து அறிவாயாக.

ஒன்பதாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 10-வது அத்தியாயம், ஜீவஸ்வரூபம்.

ஓ, ஈசா! பிராணியினுடைய இச்சரீரத்திலிருக்கும் இந்த ஜீவன் எங்கிருந்துண்டாகிருன்? அவனுடைய சுவரூபமெப்படி? சரீரத்தின் முடிவில்

எங்கே போகிறான்? போனபின் எங்கிருக்கிறான்? மறுபடியும் வேறு தேகத்திற்கு எப்படி வருகிறான்? அல்லது திரும்பவும் வராமலேயிருக்கிறானா? இவைகளைக் கூறவேண்டுமென இராமர் பிரார்த்திக்க, ஸ்ரீபகவான் சொல்லத்தொடங்கினார் :-ஓ, மகாபாக்கியம்பெற்ற இராமா! இரகஸியத்திற்கு இரகஸியமும், இந்திரன் முதலிய தேவர்களாலும், மகரிஷிகளாலும் அறியமுடியாததுமான விஷயமானது உன்னால் நன்றாய்க் கேட்கப்பட்டது. ஓ, இரகுசிரேஷ்டா! நான்கூட ஒருவருக்கும் சொல்லவேகூடாது. ஆயினும் உனது பக்தியால் மிகமனமகிழ்ந்து சொல்லுகின்றேன், சாவதானமாய்க் கேட்கவேண்டும்.

ஸத்தியஞானசுவரூபரும், அந்தமில்லாதவரும், பரமானந்த சுவரூபரும், பரமாத்துமாவும், பரஞ்சோதியும், அவயவமில்லாதவரும், இவ்வியக்த பிரபஞ்சத்திற்கெல்லாம் காரணரும் நானே. எக்காலமுமுள்ளவரும், மகா பரிசுத்தரும், சகலத்திற்கும் ஆத்துமாவாக இருப்பவரும், பற்றுதலில்லாதவரும் நானே. புண்ணியபாபமற்றவரும், மனதிற்கெட்டாதவரும், ஐம்பொறிகளாலும் கிரகிக்கமுடியாதவரும், அவைகளை தங்கள் விஷயங்களைக் கிரகிக்கும்படிசெய்பவரும், எல்லா விஷயங்களை அறிந்தவரும் நானே. என்னையறிபவன் கிடையாது. பரமாணு

முதலிய சகல காரியவஸ்துக்களுக்கும் நான் வெளிப்பட்டவன். எதினிடமிருந்து மனம், வாக்கு எட்டாது திரும்பி விடுகின்றனவோ அப்பேர்ப்பட்ட ஆனந்தரூபமான பிரும்மமாகிய என்னை யறிந்தவனுக்கு ஒன்றினிடமிருந்தும் பயமில்லை. எவனொருவன் சகல வஸ்துக்களையும் என்னிடத்தில் அறிகின்றானோ (என்னைத்தவிர வேறாக அறியாமலிருக்கிறானோ), எல்லாப்பிராணிகளிடத்தும் என்னையே ஆத்துமாவென்றறிகின்றானோ அவன் அவ்வாத்தும ஜ்ஞானத்தால் *இறக்கஞ்செய்கிறதில்லை. எவனுக்கு சகல பூதங்களும் ஆத்துமாவாகவேயாகிவிட்டதோ, எங்கும் ஒரே ஆத்துமாவாகப்பார்க்கின்ற அப்பேர்க்கொத்த ஞானிக்கு அக்காலத்தில் சோகமேது, மோகமேது? இவ்வாத்துமாவானது பிரும்மாதி ஸ்தாவராந்தமான சகலத்தினிடத்திலும் அவித்தையால் மறைக்கப்பட்டு பிரகாசிக்கவில்லை. ஆகிலும் சூக்ஷ்மமானதையும் அறியுந்தன்மையுள்ள ஞானிகளால் சிரவணமனனாதிகளாலே கூர்மையாக்கப்பட்ட நிதித்தியாஸனத்தாலாகிய ஆத்துமாகாரமான

---

* இரக்கஞ்செய்கிறதில்லை என்பது:—தன்னைக் காட்டிலும் வேறொன்றைப் பார்க்கிறவனுக்கு இரக்கமுதலியவை யுண்டாவது இயல்பு. தனது ஆத்துமாவையே எங்கும் பார்க்கிறவனுக்கு இரக்கமுதலியவைகளுக்குக் காரணமான வேறு பதார்த்தமே இல்லை யென்பது கருத்து.

புத்தி விருத்தியால் அறியப்படுகிறது. நான் நாசமில்லாத ஒரே ஒருவனாக இருந்தாலும் அநாதியான அவித்தையோடு கூடினவனாய் அவியாகிருதபிரும்மரூபியும், சிருஷ்டிகர்த்தாவுமான ஈசுவரனுமாகின்றேன். எவ்வாறு கனவில் கேவலம் ஞானமாத்திரத்தில் இம்மூவுலகும் காணத்தக்கதாகின்றதோ, அவ்வாறே என்னிடத்தில் இவ்வெல்லாவுலகும் தோன்றி, இருந்து, லயமடைகின்றது. பற்பல அவித்தைகளுடன்கூடி ஜீவசுவரூபமாக நான் வசிக்கிறேன். கருமேந்திரியங்கள் ஐந்தும், ஞானேந்திரியங்கள் ஐந்தும், மனம், புத்தி, அகங்காரம், சித்தம் ஆகிய நான்கும், பிராணன் முதலிய ஐந்து வாயுக்களும் சேர்ந்து லிங்கசரீரமாகின்றது. அந்த லிங்கசரீரத்தில் அவித்தையோடுகூடி பிரதிபிம்பித்த சைதன்னியமே வியாவகாரிக ஜீவன். அவனே க்ஷேத்திரஜ்ஞனென்றும், புருஷனென்றும் சொல்லப்படுகின்றான். அவனே நல்வினை தீவினையின் பயனை இப்பிரபஞ்சத்தை அனுபவிப்போனேயொழிய பிம்பமாகிய ஆத்துமாவுக்கு யாதொரு ஸம்மந்தமில்லை. இகலோகத்திலிருந்து பரலோகத்திற்குப் போவதும், பரலோகத்திலிருந்து இகலோகத்திற்கு வருவதும் அச்சிவனே. அவ்வுலகங்களில் ஜாக்கிரம் சுவப்பனம் முதலிய அவஸ்தைகளை அனுபவிப்பவனும் அவனே. முகம் சுத்தமாயிருந்தாலும் அதின் பிரதிபிம்பமா

னது எப்படி கண்ணாடிக் கறுப்பினால் மலினமாகத் தோன்றப்படுகிறதோ அவ்வாறு அந்தக்கரண தோஷங்களால் ஆத்துமாவும் காணப்படுகின்றது. அந்தக்கரணத்தை ஆத்துமாவாகவும், ஆத்துமாவை அந்தக்கரணமாகவும் ஒன்றையொன்றாய் பிரமித்து ஒன்றாய் அபிமானிப்பதால் பரமாத்துமாவானது துக்கமடைவதுபோலாகிறது. பாலைவனத்தில் நடுமத்தியானத்தி லெரிக்கும் சூரியக்கிரணங்கள் தாகத்தால் மதிமயக்கமுள்ளவர்களால் கானல்நீராகக்காணப்படுகிறது. ஆனால் அது தாபகரமாயிருக்குமேயொழிய் குளிர்ந்திராது, அதுபோல ஒருவித பற்றலில்லாத ஆத்துமாவானது, தன் ஆத்தும சுவரூபத்தின் அறிவின்மையாகிற அவித்தியாதோஷத்தாலே மாத்திரம் கருத்திருத்துவம் முதலிய தருமத்தை யுடையதாக மூடர்களுக்குத் தோன்றுகின்றது.

ஜீவன் அன்னமயபிண்டமான இச்சரீரத்தின் இருதயத்திலும் இலிங்க சரீரத்திலு மிருக்கின்றான். அவன் இத்தேகத்தில் நகத்தநுணிவரையிலும் எங்கும் வியாபித்திருப்பதைச் சொல்லுகிறேன். சாவதானமாய்க்கேள். ஜீவனானது தானென்று இதை அபிமானிப்பதால்தான் இம்மாமிச பிண்டமானது விளங்குகின்றது. தொப்புளுக்குமேல் கழுத்துக்குக் கீழ் யாதொன்றானது எப்பொழுதும் வியாபித்துக் கொண்டிருக்கிறதோ அதன் மையத்தில் இருதயமா

ளது காம்போடுகூடிய தாமரை மொட்டுப்போல் அதோமுகமாயிருக்கின்றது. அதினுள் சூக்ஷமமும் உத்தமுமான குகை யிருக்கிறது. அதிலடங்கிய ஆகாயமே தகராகாயமெனப்படும். அவ்விடத்தில் ஜீவன் பிரகாசிக்கின்ருன். மயிர்நுனியை நூருகப் பிளந்து, அதில் ஒரு பங்கை நூருகப்பிளந்தால் அதில் ஓர்பாகமானது எவ்வளவு சூக்ஷமமாயிருக்குமோ அவ்வளவு சூக்ஷமமாய் ஜீவனிருக்கிருனென்று விசேஷமாய் அறியத்தக்கது. என்ருலும், அச்சீவன் அவித்தைநீங்கினல் அளவிடக்கூடாத பிரும்ம சுவரூபத்தை யடையத் திரமையுள்ளவனுகின்ருன். கதமபபுஷ்பத்தில் கேசரங்கள் (தாதுக்கள்) எங்கும பரவியிருப்பதுபோல், இருதயகமலத்தினின்று புறப்பட்டு சுற்றிலும் பரவியிருக்கும் நாடிகளால் இச்சரிரமுழுதும வியாபிக்கபபட்டிருக்கிறது. அவைகள் ஹிதத்தை (பலம்) அளிக்கின்றமையால் ஹிதம் என்று கூறப்படுகின்றது. யோகசாஸ்திரம் அறிந்தவர்களில் தேர்ந்தவர்களால் அந்நாடிகள் 7200 என்று கணக்கிடப்பட்டிருக்கின்றன. அந்நாடிகள் சூரியனிடத்தினின்று கிரணங்கள் வெளிப்படுவதுபோல் இருதயத்தின்று வெளிப்பட்டிருக்கின்றன. அவைகளில் நாலுபுரமும பரவியிருக்கிற 101 நரம்புகள் முக்கியமானவைகள். அவைகள் நதிகள் ஜலத்தை அடைவிப்பதுபோல கருமபலன்களை அடையும்படி செய்

கின்றன. அதில் 100 நாடிகள் சுகதுக்காதிகளுக்குக் காரணமாயிருப்பதால் ஜாக்கிரம், சுவப்பனம் முதலிய அவஸ்தையின் பலனை அனுபவிப்பதின் பொருட்டாகின்றன. மற்றொரு நாடியோ செங்குத்தாய் உயரத் தலையினுச்சிவரையில செல்லுகின்றன. அதற்குச் சுழுமுனையென்று பெயர். அவற்றுள், விஷயங்களைக் கிரகிப்பதற்காக ஒவ்வொரு இந்திரியங்களையும் நோக்கி பவ்வத்துநாடிகள் செல்லுகின்றன. அதிலடங்கிய சைதன்னியத்தைத்தான் ஜிவாத்துமாவென்று வித்துவான்கள் சொல்லுகின்றார்கள். இராகு தனித்துக் காணத்தகாதவனாயிருந்தபோதிலும் எப்படி சந்திரமண்டலத்தில் காணப்படுகின்றானோ, அப்படி ஆத்துமா எங்கும் வியாபித்திருந்தும் இலிங்கசரீரத்தல் காணப்படுகின்றான். கண்ணுக்குப்புலப்படும் குடத்தில் அதிலடங்கியதாகிய ஆகாயம் எவ்வாறு தோன்றுமோ, அவ்வாறே எங்கும நிறைந்த ஆத்துமா லிங்கசரீரத்தில காணப்படுகிறான். ஆத்துமாவானது எங்கும் நிறைந்து அசைவற்றிருந்தபோதிலும் ஜாக்கிராவஸ்தையில்ஒவ்வொரு அறியக்கூடிய வஸ்துவிலும் ஆத்துமா பிரகாசிப்பதால் அவ்வாத்துமா போகிறதென்று உபசரிக்கப்படுகிறது. சூரியனானது எப்படி பத்துத்திக்கிலும் தனது கிரணங்களால் வியாபிக்கிறதோ அவ்வாறு லிங்கசரீரத்தினுண்டாகும் விருத்திகள் நாடிக

ளின் வழியாய் கிரியையில்லாத சகல பதார்த்தங்க ளேயும் அடைகிறது. அந்தந்த கருமங்களுக்குத் தக்கபடி ஜாக்கிரதவஸ்தையிலுள்ள புண்ணிய பாப ங்களே அனுபவிக்க இலிங்கசரீரமானது மோக்ஷம் வரையில் நாசமடையாமலிருக்கிறது.

கடமுண்டுபண்ணப்பட்டவுடன் அதற்குள்ளி ருக்கும் ஆகாயம் கடாகாசமென்ற பெயரையடை ந்து அக்குடம் நசித்தவுடன் அது சுயரூபமாகவே யாகிவிடுகிறதுபோல, அவித்தையால் கல்பிக்கப் பட்ட இச்சரீரமானது ஆத்தும ஞானத்தினுல் நாச த்தை அடைந்தபிறகு ஆத்தும சுவரூபமாகவேயிரு த்தலே முக்தியென்று சொல்லப்படுகிறது. ஜாக்கி ராவஸ்தையைக்கொடுக்கும் கருமாமுடிந்து சுவப்ப னுவஸ்தையின் அனுபவம் நேரிட்டபொழுது கருமா வினுலுண்டுபண்ணப்பட்ட ஸம்ஸ்காரத்தால் (வா ஸனே) சுவப்பனத்தை அனுபவிக்கவேண்டிய விருப் பத்தால் ஸ்தூலசரீர கண் காது முதலியவைகளேக் காரணமாகக்கொண்ட ஞானவஸ்தையை மறைத்து மாயாவியானவன் தன் மாயையால் வேறு உருவ மடைவதுபோல் ஆத்துமாவானது வேறு அவஸ் தையை அடைகிறது. கருமவசத்தால் வாஸனு ரூபமாய்மாத்திரமிருக்கிற கடாதிபதார்த்தங்கள் புத் திமுதலிய இந்திரியங்கள், பூதங்கள் இவைகளே சுவ யம்ஜோதியாயும் சாக்ஷியாயுமிருக்கிற ஆத்துமாவா

முதலிய சகல காரியவஸ்துக்களுக்கும் நான் வெளிப்பட்டவன். எதினிடமிருந்து மனம், வாக்கு எட்டாது திரும்பி விடுகின்றனவோ அப்பேர்ப்பட்ட ஆனந்தரூபமான பிரும்மமாகிய என்னை யறிந்தவனுக்கு ஒன்றினிடமிருந்தும் பயமில்லை. எவனொருவன் சகல வஸ்துக்களையும் என்னிடத்தில் அறிகின்றானோ (என்னைத்தவிர வேறாக அறியாமலிருக்கின்றானோ), எல்லாப்பிராணிகளிடத்தும் என்னையே ஆத்துமாவென்றறிகின்றானோ அவன் அவ்வாத்தும ஜ்ஞானத்தால் *இறக்கஞ்செய்கிறதில்லை. எவனுக்கு சகல பூதங்களும் ஆத்துமாவாகவேயாகிவிட்டதோ, எங்கும் ஒரே ஆத்துமாவாகப்பார்க்கின்ற அப்பேர்க்கொத்த ஞானிக்கு அக்காலத்தில் சோகமேது, மோகமேது? இவ்வாத்துமாவானது பிரும்மாதி ஸ்தாவராந்தமான சகலத்தினிடத்திலும் அவித்தையால் மறைக்கப்பட்டு பிரகாசிக்கவில்லை. ஆகிலும் சூக்ஷ்மமானதையும் அறியுந்தன்மையுள்ள ஞானிகளால் சிரவணமனனாதிகளாலே கூர்மையாக்கப்பட்ட நிதித்தியாஸனத்தாலாகிய ஆத்துமாகாரமான

---

* இரக்கஞ்செய்கிறதில்லை என்பது:—தன்னைக் காட்டிலும் வேறொன்றைப் பார்க்கிறவனுக்கு இரக்கமுதலியவை யுண்டாவது இயல்பு. தனது ஆத்துமாவையே எங்கும் பார்க்கிறவனுக்கு இரக்கமுதலியவைகளுக்குக் காரணமான வேறு பதார்த்தமே இல்லை யென்பது கருத்து.

புத்தி விருத்தியால் அறியப்படுகிறது. நான் நாசமி லலாத ஒரே ஒருவனாக இருந்தாலும் அநாதியான அவித்தையோடு கூடினவனாய் அவியாகிருதபிரும்ம ரூபியும், சிருஷ்டிகர்த்தாவுமான ஈசுவரனுமாகின் றேன். எவ்வாறு கனவில் கேவலம் ஞானமாத்திர த்தில் இம்மூவுலகும் காணத்தக்கதாகின்றதோ, அவ் வாறே என்னிடத்தில் இவ்வெல்லாவுலகும் தோ ன்றி, இருந்து, லயமடைகின்றது. பற்பல அவித் தைகளுடன்கூடி ஜீவசுவரூபமாக நான் வசிக்கி றேன். கருமேந்திரியங்கள் ஐந்தும், ஞானேந்திரி யங்கள் ஐந்தும், மனம், புத்தி, அகங்காரம், சித்தம் ஆகிய நான்கும், பிராணன் முதலிய ஐந்து வாயுக்க ளும் சேர்ந்து லிங்கசரீரமாகின்றது. அந்த லிங்கசரீ ரத்தில் அவித்தையோடுகூடி பிரதிபிம்பித்த சைதன் னியமே வியாவகாரிக ஜீவன். அவனே க்ஷேத்திர ஜ்ஞனென்றும், புருஷனென்றும் சொல்லப்படுகின் றான். அவனே நல்வினை தீவினையின் பயனான இப் பிரபஞ்சத்தை அநுபவிப்போனேயொழிய பிம்பமா கிய ஆத்துமாவுக்கு யாதொரு ஸம்மந்தமில்லை. இக லோகத்திலிருந்து பரலோகத்திற்குப் போவதும், பர லோகத்திலிருந்து இகலோகத்திற்கு வருவதும் அச் சீவனே. அவ்வுலகங்களில் ஜாக்கிரம் சுவப்பனம் முதலிய அவஸ்தைகளை அநுபவிப்பவனும் அவனே. முகம் சுத்தமாயிருந்தாலும் அதின் பிரதிபிம்பமா

தைவந்தபின் உண்டாகிறது. இவ்விதம் இகலோகத்திலும் பரலோகத்திலும் ஆத்துமா, ஜாக்கிரசுவப்பன சுழுப்தியாகிய இம்மூன்றவஸ்தைகளையும் அனுபவிக்கிறான். (மறுபடியும் சுழுப்தி அவஸ்தையிலிருந்து திரும்புங்கால்) அக்கினியிலிருந்து அதன்பொரிகளுண்டாவதுபோல் ஜீவாத்துமாக்கள் கருமவசத்தால் வெவ்வேறாகவாகி அக்கருமவசத்தாலேயே மனம், புத்திமுதலியவைகளுமுண்டாகின்றன. குடமானது எந்தஜலத்தால் நிறப்பப்பட்டு குளத்தின் நீரில் ஆழ்த்தப்படுகிறதோ மறுபடியும் அந்தஜலத்தோடே அக்குடம் எடுக்கப்படுவதுபோல் அவித்தையாகிய உபாதியுடன்கூடின ஜீவாத்துமாவும் சுழுப்தியில் பரமாத்துமாவோடு ஐக்கியமாகியும் மறுபடியும் ஜாக்கிரதவஸ்தையில் பிரிந்துவருகிறது. இந்த உபாதியாகிய அவித்தையும் அவித்தியாகாரியங்களும் உள்ளவரையில் சகலமும் காணப்படுமே ஒழிய ஞானக்கினியால் அவைகள் நாசமானபின் எல்லாம் துலைந்து ஜீவன் பிரும்மத்தோடு ஏகரூபமாயிருக்கும். சூரியன் ஒருவனாயிருந்தபோதிலும் அனேகங்களில் பிரதிபிம்பித்து அவைகள் போகும்போதும் வரும்போதும் எவ்வாறு தானும் போகிறதும் வருகிறதுமாயிருக்கிறானோ, அதுபோலவே, நிர்விகாரமான பரமாத்துமாவும் காணப்படுகிறது. மோகமே வாஸ்தவசுவரூபத்தை அறிவதற்குத் தடையாயிருப்பதால் அப்பர

மாத்துமாவுக்குச் சகலமும் யுக்தமா யிருக்கலாம். ஆத்துமாவோ ஸ்வபாவமாய் தேகாதிகளைக்காட்டி லும் வேருய் ஸ்வயம் ஜோதிரூபமானவர். ஓ, தசரத மைந்தா! இவ்வாறு உனக்கு ஜீவசுவரூபம் சொல்லப்பட்டது.

பத்தாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 11-வது அத்தியாயம், ஜீவன் வேறு உலகத்தையும் சரீரத்தையும் அடையும் விதம்.

ஸ்ரீ பகவான் கூறுகின்ருர்:— ஓ, இராஜசிரோஷ்டா! ஜீவன் வேறுசரீரத்திற்குப் போவதையும் அப்படியே வேறு உலகம் செல்வதையும் உரைக்கின்றேன். யாமுரைப்பதை மிகஜாக்கிரதையாய்க்கேள். புசிக்கப்படும் அன்னம் முதலியவைகளுடையவும், குடிக்கப்படும் ஜலம் முதலியவைகளுடையவும் ஸாரத்தால் ஜாடராக்கினிக்கு ஆவரணமான ஆமக்கட்டு உண்டாகிறது. ஸ்தூலசரீரம், லிங்கசரீரமாகிய இவ் விரண்டிற்கும் அவ்வாமககட்டுதான் ஜீவாதாரமாக இருக்கிறது. பிணியாலும், மூப்பாலும் ஜாடராக்கினியானது பீடிக்கப்பட்டு அதனுல் கபம் அதிகமாயுண்டாகி உண்ணப்பட்டதும் குடிக்கப்பட்டதும் ஜீரணமாகாமற்போகவே புக்த பீத ரஸமில்லாமையால் தாதுக்கள் உலர்ந்துபோகிறது. வாயுக்கள், உட்கொ

ள்ளும் உணவின் ரஸங்களால் சரீரத்தை போஷிக்கி ன்றன. உணவின் ரஸங்களை சரீரமெங்கும் சமனுக கிரவிச்செலுத்துவதால் வாயுவுக்கு ஸமானனென்று பெயர். அப்படி அக்கினி மந்தமாய்ப் போனகாலத் தில் அந்த ரஸமில்லாமல் அவ்வாமக்கட்டும் குறைந் துபோய்விடுவதால் மிகவும் கனிந்த ரஸம்நிறம்பிய மாம்பழமானது தானுகவே காம்பிலிருந்துவிடுபட்டு விழுவதுபோல இலிங்கசரீரமானது ஸ்தூலசரீரத்தி னின்று போய்விடும். அவ்வாறு லிங்கசரீரம் போகு ங்கால் அந்தந்த விடங்களிலிருந்து இந்திரியங்களு டைய வாஸனைகளையும், மனம், புத்தி முதலிய ஆத் தியாத்மிகங்களையும், ஆதிபூதங்களையும் ஆகரிஷித்து க்கொண்டு இருதயகமலத்தில் ஒன்ருகவாகிய மேல் நோக்கும் பிராணவாயுவானது மற்ற ஒன்பது வாயு க்களுடன் சேர்ந்துவிடுகிறது. அப்போதுதான் ஊர் த்துவ சுவாஸமுண்டாகிறது. அப்போது அப்படி ஒன்ருயிருக்கிற பிராணவாயுவானது கண்முதலிய வழியாய் அல்லது சிரசினது உச்சியின் வழியாய் அந்தந்த நாடியின் மார்க்கமாய் புறப்படுகிறது. ஜீவாத்துமாவானது தனது வித்தை (உபாஸ்தி) கருமா, வாஸனைகள் இவைகளோடு கூடினதாகி பர மாத்துமாவை ஆசிரயித்துச் செல்லுகின்றது. எப் படியானுல் ஆகாயம் நிறைந்த கடமானது ஓரிடம் விட்டு வேறிடம் கொண்டுபோகப்படும்போது அதில்

நிறைந்த அவ்வாகாயமும் கடம் கொண்டு போகப்பட்ட அவ்விடத்திலும் கடாகாசமென்றே பெயரை அடைகிறதோ அவ்வாறு ஆத்துமாவினுடைய லிங்க சரீரம் (லிங்க சரீரத்தில் அடங்கிய சைதன்னியம்) கருமாவுக்குத் தக்கபடி வேறு ஸ்தூல சரீரமடைகிறது. ஒருபெரிய மீனானது மகா நதியில் இக்கரைக்கும் அக்கரைக்கும் சஞ்சரிப்பதுபோல் லிங்கசரீரமானது மோக்ஷமடைகிற வரையில் சஞ்சரித்துக் கொண்டிருக்கும். ஜீவன் பாபத்தை அனுபவிக்க வேண்டியிருந்தால் எமதூதர்களால் அதிகாரஞ் செலுத்தப்பட்டு யாதனா சரீரம் பெற்று கேவலம் நரகத்திற்கே செல்வான். யாகம் செய்தல், குளம்வெட்டல், ஆலயம் அமைத்தல் முதலிய தருமங்களை எப்போதும் செய்கிறவன் பிதுருயாண மென்னும் தூமாதி மார்க்கத்தின் வழியாய் பிதுருலோகம் செல்லுகிறான். அப்படி அம்மார்க்கத்தோடு போகிற ஜீவன் முதலில் தூமதேவதையையும், இராத்திரி தேவதையையும், பிறகு கிருஷ்ண பக்ஷ தேவதையையும், பிறகு தெக்ஷணாயனதேவதையையும், பிறகு பிதுருலோகத்தையும் கடைசியாக சந்திரலோகத்தையுமடைந்து அங்கு திவ்விய சரீரம் பெற்று பரம பாக்கியத்தை அனுபவிக்கிறான். இச்சீவன் அவ்வுலகத்தில் கருமபலன் அபனுவித்தாகும் வரையில் சந்திரனுக்குச் சமானமாகவே வசித்திருப்பான்.

அங்கு அனுபவிக்கவேண்டிய கருமபலன்களை அனுபவித்தபின் மற்றுமுள்ள கருமாக்களோடு மறுபடியும் ஜீவன் இவ்வுலகுக்குத் திரும்பி வருகிறான். அப்படி வரும்போது அந்த திவ்விய சரீரத்தைவிட்டு கேவலம் ஜீவத்தன்மையை யடைந்து, அந்தரிக்ஷம் வந்து வாயுவுடன் சேர்ந்து அக்கினின்று ஜலத்தை யடைந்து, அதினின்று மேகத்தையடைந்து, பிறகு மழையின் வழியாய் பூமியில் வந்து, கருமவசத்தால் உண்ணத்தக்க தானியாதிகளில் சம்மந்தம் பெறுவான். ஆனால், ஞானஹீனர்களாகிய கருமிகள்மட்டும் அவரவர்களுடைய கருமத்துக்குத் தக்கபடியான் சரீரமடைவதற்காக யோனியை அடைவார்களேயன்றி கேவலம் ஞானிகள் தத்தம் ஞானம், உபாஸனம் இவைகளுக்குத்தக்கபடி கிரமமாய் முத்திபெறுவார்கள். ஆதலால், சரீரமடையும் ஜீவன் மேற்சொல்லியபடி தானியாதிகளில் சேர்ந்திருந்தபின் அவைகள் அன்னமாகி தந்தை தாய்களால் புசிக்கப்பட்டு அவர்களிடத்து சுக்கில சோணிதங்களாய்ப் பரிணமித்து கருப்பமாயாவான். பிறகு கருமாவுக்குத் தக்கபடி ஆண், பெண், அலியாகவாவான். ஓ, இராமா! இவ்வாறு ஜீவனுடைய கதி சொல்லப்பட்டது.

அவனுடைய முத்திபெறும் வழியையும் கூறுகின்றேன், எவன் பொறியடக்க முதலிய குணங்க

னுடன் கூடி எப்போதும் ஸகுண பிரும்மோபாஸ னையிலேயே முயன்றிருக்கின்றானே அவன் தேவ யான மென்னும் அர்ச்சிராதி மார்க்கத்தினால் பிரும் மலோகம் செல்வான். அப்படி அம்மார்க்கத்தோடு போகிற ஜீவன் முதலில் அர்ச்சிர் தேவதையையும், பிறகு தினபிமானி தேவதையையும், பிறகு சுக்கில பக்ஷதேவதையையும், பிறகு உத்திராயன தேவதை யையும், ஸம்வத்ஸர தேவதையையும், பிறகுசூரிய லோகத்தையும், சந்திர லோகததையும், பிறகு வித் தியுல் லோகத்தையும் அடைகிறான். பிறகு பிரும் மலோகத்திலிருந்து ஓர் திவ்விய புருஷன் அவ்விடம் வந்து அவ்வுபாஸகனான ஜீவனுக்கு திவ்விய சரீரம ளித்து பிரும்மலோகத்திற்கு அழைத்துக் கொண்டு போய் விடுவான். அவன் பிரும்மலோகத்தில் திவ் விய சரீரத்தோடு கூடினவனாகி இஷ்டமான போக ங்களை அனுபவித்துக்கொண்டு அங்கேயே நெடுங்கா லம் வசித்து (பிரும்ம விசாரஞ்செய்து) கடைசியாக (பிரளயகாலத்தின் முடிவில்) அக்காரிய பிரும்மா வோடு கூட முக்தியடைவான்.

சுத்தப்பிரும்ம ஸாக்ஷாத்காரம் செய்கிறவனோ வென்றால் ஓரிடமும் செல்லுகிறதில்லை. அவன் பிராணன்கள் ஜலத்தில்போட்ட உப்புக்கட்டிபோல் லயித்துவிடுகின்றன. சுவப்பனத்தில் தோன்றிய

பிரபஞ்சமானது விழித்தவுடன் எப்படி லயமடைகின்றதோ, அதுபோல பிரும்மஜ்ஞானமுண்டானவனுக்கு அப்பொழுதே சகல பிரபஞ்சமும் லயமடைந்து விடுகின்றன. வித்தை (உபாஸ்தை, ஞானம்) கருமா இவைகளல்லாதவன் தூமாதி மார்க்கம், அர்ச்சராதி மார்க்கமல்லாத மூன்றாவதான அதோகதியை அடைந்து மகாகோரமான ரௌரவ மகாரௌரவாதி நரகங்களை அனுபவித்து, பிறகு, முற்பவத்தில் செய்தவினையின் சேஷத்தால் மிகவும் அற்பஜந்துக்களாகி, (க்ஷணிகத்துக்கு க்ஷணிகம் பிறந்து இறக்கும்ஜந்துக்கள்) பூமியில் பேன், கொசு, ஈ முதலிய ஜன்மாவை அடைகின்றான். இவ்வாறு ஜீவகதி கூறப்பட்டது.

ஓ, இராமா! இன்னும் வேறு யாது கேட்க விரும்புகின்றனை யென, இராமர் வினவுகின்றார். "ஓ, ஜகதீசா! பிரும்ம லோகத்திலேயும், சந்திரலோகத்திலேயும் ஞான கருமாக்களுக்குத் தக்கவிதம் ஜீவன் போகங்களை அனுபவிக்கிறானென்று தேவரீரால் சொல்லப்பட்டதே. அதுவல்லாமல் கந்தருவாதி லோகங்களிலுள்ள போகம் எவ்வாறுள்ளது? ஒருவன் கருமதேவனாகின்றான்; மற்றொருவன் இந்திரனாகின்றான். இவையெல்லாம் கருமபலனா, அல்லது ஞானபலனா? எனக்கு அவ்விஷயங்

களில் மகா சந்தேகமுண்டாயிருக்கிறது. ஓ, பார்வதீபதே! அதைத் தீரவுணாக்கவேண்டும்'' என, சிவபெருமான் சொல்லுகின்றார்:—"ஓ, இராமா! வித்தியா கருமாவுக்குத் தக்கபடிதான் அவைகள் பலனாகவாகும். யௌவனப் பருவமுள்ளவனாகவும், அழகுள்ளவனாகவும், சூரனாகவும், ரோகமில்லாதவனாகவும், பலவானாகவுமிருந்து ஏழு தீவுகளுடன் கூடிய பூமியை (சகலபூமி) சத்துருவில்லாமல் அனுபவிப்பவனுக்குள்ள ஆனந்தமே உயர்ந்த மானுஷானந்தமெனப்படும். அவ்வானந்தத்தின் நூறு மடங்கானது மனிதனாயிருந்து தவத்தால் கந்தருவனாகவான மனுஷிய கந்தருவனுடைய ஆனந்தமாகும். இம்மனுஷிய கந்தருவனுடைய ஆனந்தத்தின் நூறு மடங்கு தேவகந்தருவர்களின் ஆனந்தமாகும். இவ்வாறாக ஆனந்தமானது மென்மேல் நூறு மடங்கு அதிகமாயிருக்கும். என்றும் பிதுருலோகவாசிகளான பிதுருக்களுக்கும், பிறக்கும்போதே தேவர்களாய்ப் பிறந்தவர்களுக்கும், கருமதேவர்களுக்கும், இந்திரனுக்கும், பிரஹஸ்பதிக்கும், பிரஜாபதிக்கும், பிரும்மாவுக்கும் ஆனந்தமானது மேற்கூறிய ஆனந்தத்திற்கு மென்மேலும் நூறுமடங்கு அதிகரிக்கின்றது. மென்மேலும் ஆத்துமஞானம் அதிகமாயிருப்பதால் சுகம் அதிகமாயிருப்பதேயொழிய தேவலோகத்தில் வேறு விசேஷமொன்றும் கிடையாது.

வேதங்களையறிந்து அவ்வழி நடந்து ஒரு பாபமும் அற்றவனுப் சகல விருப்பத்தையுமொழித்த பிராம ணனுக்கும் மேற்கூறிய மென்மேலும் நூறுமடங்கா யுள்ள ஒவ்வொருவரது ஆனந்தமுண்டு. ஓ, தசரத மைந்த! ஆகையால் ஆத்தும ஞானத்துக்கு மேலா னது ஒன்றுமில்லை. பிராமணன் பிரும்மஞ்ஞான (சாக்ஷாத்கார) முள்ளவனாகவிருந்தால் கருமங்களா ல் விருத்திபடைவதுமில்லை, குறைவதுமில்லை; பா தகங்களாலும், மற்றுமுள்ள கருமத்காலும் தீண்டத் தக்கவனுமில்லை. எவனொருவன் அறிந்து கருமங் களை அனுஷ்டிக்கின்றானோ அவனுக்கு அக்ஷயமான பலனுண்டாகும். கோடி பிராமணர்களுக்கு அன் னமளிப்பதாலுண்டாகும்பலன் ஒருஞானிக்கு அன் னமளிப்பதாலுண்டாகும். ஞானவானுக்கு ஒன்று கொடுத்தால் அது கோடி மடங்கு அதிகம் கொடுக் கப்பட்டதாகவாகும். ஞானியானவன் ஈசுவரஸ்வ ரூபியாகையால் அவனைப் பகைக்கிறவன் மெய்யுலர் ந்து மடிவான். ஈசுவரோபாஸகன் மறுபடியும் ஒரு போதும் அதோகதி அடையான். ஆகையால், ஓ, இராமா! ஈசுவரோ பாஸ்னையையே முக்கியமாய் நாடி சுகமடைவாயாக."

பதினொருவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 12-வது அத்தியாயம், உபாஸனை விதி.

ஓ, தேவாதி தேவா! எனக்கருள் புரிவதாயின் உபாஸனையின் விதி, இடம், காலம், அங்கங்கள், நியமங்கள் இவைகளையெல்லாம் கூறவேண்டுமென இராமர் பிரார்த்திக்க, ஈசன் சொல்லுகின்றார்:—கேளாய் ஓ, இராமா! உபாஸனைக்குரிய தேசகாலாதிகளை யுரைக்கின்றேன். சகலதேவசரீரங்களிலும் எனது அம்சங்களே இருக்கின்றன. எவர்கள் அன்னிய தேவதைகளையும் பக்தி சிரத்தையுடன் உபாசிக்கின்றார்களோ அவர்களும்முறைதெரியாமல் என்னையே உபாசிக்கின்றவர்களாவார்கள். ஏனெனில் இவ்வுலகு யாவும் என்னைத் தவிர வேறில்லையன்றோ! ஓ, இராஜேந்திரா! சகல கருமங்களையும் அனுபவிப்பவனும் நானே, அவைகளின் பலத்தைக் கொடுப்பவனும் நானே. எவர்கள் எந்த ரூபமாக என்னையே உபாஸிக்கின்றார்களோ அவர்களுக்கு அந்த ரூபமாக பிரஸன்னமாய் அவர்களிஷ்டத்தை யளிப்பேன். விதிப்படி அல்லது, விதியில்லாமலாவது பக்தியுடன் மட்டில் எவர்கள் என்னைஉபாஸிக்கின்றார்களோ அவர்களுக்கு பிரஸன்னமாய் பலத்தைக் கொடுப்பேன். அவ்விஷயத்தில் சந்தேகமேயில்லை. கெட்ட நடத்தையுடையவனுயினும் புத்தியைப் புறத்தில் போகவிடாது என்னை உபாஸிக்கும் பக்ஷத்தில் அவன்

நல்ல உறுதிகொண்டிருப்பதால் ஸாதுவாகவே எண்ணத் தகுதி யுள்ளவனுவான். எவன் என்னையே தனது ஆத்துமாவாக அறிகின்றானோ அவனை பிரும்மகத்தியாதி பாபங்கள் நாடுகிறதில்லை.

உபாஸனுவிதிகள் ஸம்பத்து, ஆரோபம், ஸம்வர்க்கம், அத்தியாஸம் என நான்கு வகைப்படும்.

குணஸம்மந்தத்தால் தாழ்ந்ததை உயர்ந்ததாய் தியானித்தல் ஸம்பத்து எனப்படும். (உ-ம்.) अनन्तं वैमनः என்னும் சுருதியில் மனதும் விருத்திகளால் அனந்தமாயும், விசுவேதேவர்களும் அனந்தமாயிருப்பதால் அனந்த குண சம்பந்தத்தால் தாழ்ந்த மனதை உயர்ந்த விசுவேதேவர்ளாக பாவித்தலாம்.

வேதவிதியின் பலத்தால் ஒன்றை ஒன்றிலேற்றி தியானித்தல் ஆரோபம் எனப்படும். (உ-ம்.) ओमित्येतत् என்னும் சுருதியில் ஸாமபாகமாகிய உத்கீதத்தின் அவயவமான ஓங்காரத்தை பிரும்மமாக உபாஸித்தலாம்.

புத்திபூர்வமாய் ஆரோபித்து உபாஸித்தல் அத்தியாஸம் எனப்படும். (உ-ம்.) योषा वाव என்னும் சுருதியில் ஸ்திரீயினிடத்து அக்கினிபுத்தி வைத்து உபாஸித்தலாம்.

கிரியாஸம்பந்தத்தால் உபாஸித்தல் ஸம்வர்க்கம் எனப்படும். (உ-ம்.) वायुर्वाव என்னும் சுருதியில், பிரளயகால

த்தில் அப்பு, தேயு முதலிய சகல பூதங்களேயும் ஸம்காரஞ் செய்துகொண்டு தான் ஒன்ருயிருக்கும் வாயுவை ஸம் வர்க்க (ஸம்காரம்) கிரியாஸம்பந்தத்தால் ஸம்வர்க்கமெ ன்று உபாஸித்தலாம்.

புத்திவிருத்தியால் நெருங்கி, உபாஸிக்கும் தேவ தைவேறு, தான்வேறென்ற கொள்கையின்றி தான் அத்தேவதாஸ்வரூபமாயிருத்தல் அந்தரங்கோபாஸ னமாம். ஸம்பத்து முதலியவைகளோ பஹிரங்கோ பாஸனங்களாம். இதாஞானம் (புத்திவிருத்தி) க ளால் மறைக்கப்படாத தியானிக்கப்படும் தேவதாஸ் வரூபமான ஒரேவிதமான ஞானத்தொடர்ச்சி (அந் தக்கரண விருத்திப்பிரவாகம்) யானது உபாஸன மெனப்படும். ஸம்பத்து முதலிய பஹிரங்க விஷ யத்திலோ திருடமான புத்திவிருத்தியே உபாஸன மாம். கருமகாலத்தில் அக்கருமாங்கங்களின் விஷ யத்திலோ சிந்தித்தல் மாத்திரம் உபாஸனமாம். ஓ, இராமா! இவ்வாறாக உனக்கு உபாஸனங்கள் கூற ப்பட்டன.

இனி உபாஸனத்தின் அங்கங்களேக் கூறுகின் றேன் கேள். உபாஸனத்திற்காக புண்ணிய க்ஷே த்திர தீர்த்தாதிகளுக்கே போகவேண்டுமென்ற சிர த்தையை ஒழித்து எவ்விடத்தில் தன் சித்தமானது

ஒருவழியுஞ் செல்லாது நிலைபெறுகிறதோ அவ்விடத்தில் சுகமாயிருக்கவேண்டும். கம்பளத்திலாவது, சற்று மிருதுவான ஆஸனத்திலாவது, புலித்தோலின்பேரிலாவது இருந்துகொண்டு ஒருவருமில்லாதவிடத்தில் ஒரே உறுதியாக நிமிர்ந்து சமமான கழுத்து, சிரசு, சரீரம்இவைகளையுடையவனாகவும், ஆசிரமங்களை முற்றுந் துறந்து, சருவேந்திரியங்களையும் அடக்கி, தன் குருவை பக்தியுடன் வணங்கி ஞானியானவன் யோகத்திலிருக்க வேண்டும். எவன் அவிவேகியாய் மனதைக்கட்டுப் படுத்தாமலிருக்கிறானோ அவனது இந்திரியங்கள் திரமையற்ற சாரதிக்கு துஷ்டக்குதிரைபோல் வசமாகாமலிருக்கும். எவன் விவேகியாய் மனதை அடக்கிக் கொண்டிருக்கிறானோ அவனது இந்திரியங்கள் சாரதிக்கு நற்குதிரைபோல் சுவாதீனமாயிருக்கும். அவிவேகியாயும், மனவடக்கமில்லாமலும், எப்போதும் அந்தக்கரணசுத்தியில்லாமலு மிருப்பவன் உத்தமமான எனது பதவியை அடையாமல் ஜனனமரணாகி சமுசாரத்திலுழலுகிறான். எவன் விவேகியாயும், மனவடக்கமுள்ளவனாயும் இருக்கின்றானோ அவன் திரும்பவும் பிறப்பில்லாத எனது பதவியை அடைகின்றான். எவன் தன் விவேகபத்தியை சாரதியாக வைத்துக்கொண்டு மனவடக்கமுள்ளவனாக இருக்கிறானோ அவன் சமுசாரகதிக்குக் கரையான எனது பரமப

தத்தையே அடைகின்றான். இருதயகமலத்தை பாபமில்லாமலும், சுத்தமாகவும், நிர்மலமாகவும், துக்கமற்றதாகவும் ஆராய்ந்து, அச்சித்தத்தில் நினைக்கமுடியாத உருவம் பெற்றுவரும், அவ்வியக்தரும், அனந்தரும், நாசமற்றவரும, மங்களசுவரூபரும், ஆதிமத்தியாந்த மில்லாதவரும், சாந்தரும், பரப்பிரும்மமும், சகலத்திற்கும காரணரும், எங்கும் நிறைந்தவரும், சிதானந்த மூர்த்தியும், பிறப்பில்லாதவரும், ஆச்சரியப் படத்தக்கவரும், பரிசுத்தமான ஸ்படிகம்போன்ற மேனியரும், பார்வதியை பாதிசரீரமாகத் தரித்தவரும், புலித்தோலாகிற வஸ்திரத்தையுடையவரும், நீலகண்டரும், திரிநேத்திரரும், ஜடையைத்தரித்தவரும், சந்திரசேகரரும், நாகயஜ்ஞோப வீதத்தைத்தரித்தவரும், புலித்தோலை மேலாடையாகக் கொண்டவரும, மேலிருகைகளில் பரசுவையும், மானையும் தரித்தவரும், நடுமத்தியானத்திலுள்ள கோடிசூரியனுக்குச் சமானமான ஜோதிஸ் உள்ளவரும், கோடி சந்திரனுக்குச் சமானமான குளுமையுள்ளவரும், சூரியசந்திராக்கினிகளை கண்ணாகயுடையவரும், புன்சிரிப்போடுகூடி அலர்ந்த தாமரைபோன்ற முகத்தையுடையவரும், விபூதியால்பூசப்பட்ட சருவாவயவமுடையவரும், சருவாபரணங்களால் நிறைந்த சரீரமுடையவருமான என்னை தியானிக்கவேண்டும். எவன் ஆத்துமாவைக் கீழ்

அரணியாகவும்,பிரணவத்தைமேலரணியாகவும்வை த்து தியானத்தால் கடைந்து அப்பியஸிக்கின்ருனே அவனே என்னைப் பிரத்தியக்ஷமாகப் பார்க்கின் ருன். நான் வெறும் வேதவாக்கியங்களையும் சாஸ் திரங்களையும் அப்பியசிப்பதிஞலும், புத்திசாலித்த னத்திஞலும் அறியமுடியாதவன். எவன் என்னை எப்போதும் கேவல தியானத்தால்மட்டும்பிரார்த்திக் கின்ருனே அவனுக்குத்தான் எனது நிஜசுவரூபம் பிரகாசமாகும். சுருதி ஸ்மிருதிகளில் கூடாதென் றும் விலக்கப்பட்ட விஷயங்களினின்றும் ஒழிவடை யாதவனும், இந்திரிய சாபல்லியத்தினின்றும் நிவிரு த்தியடையாதவனும், சித்தத்தை நிலைநிருத்தாதவ னும், இதர பலனை நாடாது தியானமற்றவனு மாகி கேவலஞானத்தால் மாத்திரம் என்னை அடை யமாட்டான். யானே பிருமமமென்ற ஞானமுண் டானவனுக்கு ஜாக்கிரம், சுவப்பனம், சுழுப்தி இவை களில் தோன்றும் பிரபஞ்சங்களில்லாமல் சகல பந் தத்தினின்றும் விடுபடுகிருன். மூன்று அவஸ்தைக ளில் அனுபவிக்கப்படும் பதார்த்தங்களும், அனுபவி ப்பனும், அனுபவமும் ஆகிய இவையெல்லாம் ஜோ திசுவரூபியும், சாக்ஷியும், சின்மாத்திரனும், ஸதாசி வனுமான நானே. ஒருவனுயும், பிரகாசரூபியாயும், சகலபிராணிகளிடம் மறைந்திருப்பவராயும், எங் கும் நிறைந்தவராயும், சகலபிராணிகளின் அந்தரா

த்துமாவாயும், எல்லாவற்றையும் நடத்துகிறவரா யும், எல்லாபிராணிகளுக்கும் ஆதார பூதராயும், சகலத்திற்கும் சாக்ஷியாயும், ஞானரூபியாயும், கே வலராயும், நிர்க்குணராயும் யானிருக்கிறேன். தன க்கு ஒப்பற்றவரும், சகலபூதங்களுக்கு அந்தராத்து மாவாயும் (ஆனதால் சகலபிரபஞ்சத்தையும், தன் வசமாய்க் கொண்டவரும்) தம் ஒரே ரூபத்தை பற் பல நாம ரூபங்களாகச் செய்கிறவருமான என்னை எந்தவிவேகிகள் ஆசாரியாகம உபதேசத்திற்குப் பின் தான் சாக்ஷாத்தாக அனுபவிக்கின்றார்களோ அப்பேர்ப்பட்ட சாக்ஷாத்காரஞ் செய்கிறவர்களுக் குத்தான் அழிவற்ற பேரானந்தமேயொழிய மற்ற வர்க்கில்லை. ஒரே அக்கினியானது உலகிலுள்ள கட்டைமுதலியவைகளைப்பற்றி எரிந்து, தான் பற் றிய அவ்வவ்வுருவமாகிறதுபோல,அவ்வாறே யான் ஒருவனுயிருந்தும் பூதங்களில் அந்தராத்துமாவாயி ருந்து அவ்வவ்வுருவமாகின்றேன். ஒரே வாயுவா னது பிராணசுவரூபியாயிருந்து உலகிலுள்ள ஒவ் வொரு சரீரத்திலும் பிரவேசித்து அந்தந்த உருவத் துக்குத்தக்கபடியாவதுபோல் யானும். சூரியன் தனது ஒளியால் சகலபதார்த்தங்களையும் பார்க்கும் படி செய்வதால் சகலஜனங்களுக்கும் கண்ணுயிருந் தும் மூத்திரமலாதிகளான அசுசிபதார்த்தங்களைக் கூடபிரகாசப்படுத்துவதனுல் அதைப்பார்க்கிறவர்

களுக்கு சம்பவிக்கும் தோஷங்களால் அச்சூரியன் பற்றப்படாததுபோல், நான் ஒருவனுகி சகலபிராணிகளின் அந்தராத்துமாவாயிருந்தும் அப்பிராணிகளுடைய துக்கங்களால் பற்றப்படமாட்டேன். என்னை என்றுமுள்ளவராயும் சகலசரீரவாஸியாயும், தேஜோரூபியாயும், மாயைக்கெட்டாதவராயும் அறிகிறவர்களுக்குத்தான் மோக்ஷம் கிடைக்குமேயொழிய வேறு மோக்ஷமடைய வழியில்லை. முதலில், சிருஷ்டி கருத்தாவான ஹிரணியகருப்பனை நான்படைக்கிறேன், அவனுக்கு வேதங்களைக் கற்பிக்கிறேனென்று, பிரகாசரூபியும, எல்லோராலும் துதிக்கத்தகும் ஆதிபுருஷனுமான என்னை உறுதியாய் அறிகிறவன் ஜனனமரண ரூபமான மிருய்தியுவின் முகத்தினின்று விடுபடுகிருன். சமதமாதிகளோடுகூடி எதார்த்தமாய் என்னை எவன் இவ்வாறு அறிகின்ருனே அவன் சகல ஸம்ஸாரதுக்கங்களிலிருந்தும் விடுபட்டு என்னிடமே ஐக்கியமாகின்ருன்.

பன்னிரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 13-வது அத்தியாயம், மோக்ஷ நிரூபணம்.

சூதர்:—கேளீர், சௌனகாதி முனிவர்களே! இவ்விதம் ஈசன் வசனங்களைக்கேட்ட மகாபுத்திமானும், கௌஸல்யாதேவி மைந்தனுமாகிய இரா

மர், ஸ்ரீ பார்வதீபதியை நோக்கி முக்திலக்ஷணத்தைப்பற்றி வினவியதாவது. கருணையால் நிறைந்த இருதயத்தையுடைய ஓ, பகவானே! என்னிடம் தயவுவைத்து முக்தியின் சுவரூபலக்ஷணத்தை அருளவேண்டுமென, ஸ்ரீ பகவான் கூறுகின்றார்:- "ஸாலோக்கியம், ஸாரூப்பியம், ஸார்ஷ்டியம், ஸாயுஜ்யம், கைவல்லியம் என முக்தியானது ஐந்துவகைப்படும். எவனொருவன் என்னுடைய நிஜசுவரூபத்தையறியாமலும், புத்திர-மித்திர-களத்திரபலனையும் விரும்பாமலும் எப்போதும் என்னை பூஜிக்கின்றானோ அவன் எனது உலகையடைந்து இஷ்டப்படி போகங்களை அனுபவிக்கின்றான். எவனொருவன் என்னையறிந்து, சகலவிருப்பங்களையு மொழித்து, என்னையே பூஜிக்கின்றானோ அவன் என்னோடு சமானரூபமாகி எனது உலகத்தில் பூஜிக்கப்படுகின்றான். எவனொருவன் யாகாதி தருமங்களையும், குளம் வெட்டல், ஆலயம் அமைத்தல், முதலான தருமங்களையும் எனது பிரீதியின்பொருட்டேசெய்து, தான்செய்வதையும், உண்பதையும், ஆஹுதிசெய்வதையும், கொடுப்பதையும், தவஞ்செய்வதையும், மற்றெல்லாவற்றையும் எனக்கே அர்ப்பணம் செய்கின்றானோ அவன் எனது உலகில் எனக்குச் சமானமான சம்பத்தைப்பெற்று அனுபவிக்கின்றான். எவனொருவன் சமதமாதி ஸாதனங்களோடு கூடிக்கொண்டு என்னை

ந்தனது ஆத்துமாவாகவே யறிகின்ருனே அவன் பரஞ்சோதியும், அத்துவைதமுமாகிய கேவல பிரு ம்மமாகின்ருன். ஆனதால் பிரும்மசுவரூபமாயிரு த்தலே முக்தியென்று சொல்லப்படுகின்றது.

அப்பிரும்ம சுவரூபமோ, சத்தியமாயும், ஞான மாயும், அனந்தமாயும், ஆனந்தமாயும், சகல தரும மில்லாததாயும், மனதுக்கும் வாக்குக்கும் எட்டா ததும், ஸஜாதிவிஜாதியான வஸ்துக்களிருந்தப்பெ ருதது மாயிருக்கிறது. ஆதலால், ஓ, இராமா! இப்பேர்ப்பட்ட மேற்கூறிய சுத்தப்பிரும்ம சுவரூப த்தை ஸாக்ஷாத் கரித்தவர்கள் இதைத்தவிர வேறு பதார்த்தமே இல்லாததால் அவர்கள் அத்துவைத ரென்று சொல்லப்படுகிருர்கள். ஸ்தாவரஜங்கம ரூபமான ஜகத்தானது என்னிடத்திலேயே தோன் றுகிறது. ஆகாயத்தில் கெந்தருவ நகரமானது எவ் வாறு காணப்பட்டு, இருந்து, பிறகு மறைந்துபோகி றதோ அவ்வாறே அனுதியான அவித்தையால் இச் சகல பிரபஞ்சமும் என்னிடத்திலேயே கல்பிக்கப் பட்டு, என்னிடத்திலேயே இருந்து, என்னிடத்தி லேயே லயமடைகின்றது. எக்காலத்தில் என்னு டைய சுவரூபஞானத்தால் அவித்தையானது நாச மடையுமோ அக்காலத்தில் மனோவாக்குக்கெட்டாத வரும், எப்போதும் பரமானந்தரும், சுவப்பிரகாச ரும, சித்சுவரூபியுமான நான் ஒருவன்தான் இருக்

கின்றேனே தவிர, காலம், பஞ்சபூதங்கள், திக்கு விதிக்குகள் முதலிய என்னைக்காட்டிலும் வேறான பதார்த்தங்கள் கிடையவே கிடையாது. அப்போது நான் ஒருவனே இருக்கிறேன். என்னுடைய சுவரூபமானது ஒருவரது பார்வையிலுமில்லை, என்னை ஒருவனும் கண்ணால் பார்ப்பதில்லை. ஆனால், எவர்கள் என்னை தியானாதிகளால் கூர்மையான பரிசுத்த மனதால் நிச்சயமாய் அறிகின்றார்களோ அவர்கள் முக்தி பெறுவார்கள்" என, ஸ்ரீராமர் கூறுகின்றார்:-
"ஓ, ஜகதீசா! எப்படி பகவானுடைய சுத்தமான ஞானமானது மனிதனுக்கு உண்டாகும்? எனக்கருள் புரிவதாயின் அதன உபாயத்தைக் கூறவேண்டும்" என, ஸ்ரீ சிவபெருமான் சொல்லுகின்றார்:—
"பிரும்மபதவிவரையிலுள்ள சகல வஸ்துக்களிலும் ஆசையை ஒழித்து, தன்னைச்சேர்ந்த புத்திரமித்திராதிகளை வெறுத்து, மோக்ஷசாஸ்திரங்களில் சிரத்தைவைத்து, வேதாந்தஞானத்தை அடையவிரும்பி தருப்பை, ஸமித்து முதலானவைகளைக் கையிற் கொண்டு பிரும்மஜ்ஞானியான குருவை யடைய வேண்டும். பின்பு, நெடுங்காலம் சாவதானமாய்ப்பணிவிடை செய்து குருவைச் சந்தோஷப்படுத்தி, மிக்க கவனத்தோடு சகல வேதாந்தவாக்கியார்த்தத்தையும், சகல வேதாந்தவாக்கியங்களின் தாத்பரிய நிச்சயத்தையும் கவனத்தோடு கேட்கவே

ண்டும். அதைத்தான் சிரவணமென்று பிரும்மவாதிகள்கூறுகின்றார்கள். உலோகமணி முதலிய திருஷ்டாந்தங்களைக்கொண்டு யுக்திகளால் சிந்தித்தலே, வாக்கியார்த்தத்தை விவரித்துப்பலப்படுத்தும் மனனம் என்கிறார்கள். நான் என்னுடையது என்பதில்லாமல் சமமாகி சகல சங்கத்தையும் விட்டு எப்போதும் சமதமாதி சாதனங்களோடு கூடி தன்னிடத்தில் ஆத்துமாவை எப்போதும் இடைவிடாது தியான யோகத்தால் பார்ப்பதே நிதித்தியாஸன மென்று சொல்லப்படும். அப்படி பார்க்கும் சிலர்க்கு சீக்கிரமாய் சகலகருமங்களும் நாசமடைந்து ஆத்தும சாக்ஷாத்காரமுண்டாகும். சிலர்க்கு நெடுங்காலம் சென்று உண்டாகும். கோடிகோடி ஜன்மங்களாய் சம்பாதிக்கப்பட்ட கூட்டம் கூட்டமாய் குவிந்திருக்கும் கருமங்கள் அப்பிரும்மஜ்ஞானத்தால் மட்டில் நாச மடையுமே யொழிய கருமங்களின் அனேக கோடிகளாலும் நாசமடையா. ஆத்தும ஸாக்ஷாத்காரம் வந்தபிறகு ஏதாகிலும் புண்ணியமாவது, பாபமாவது, கொஞ்சமாயாவது அதிகமாயாவது செய்யப்பட்டால் அக்கருமத்தால் அந்த ஞானி பற்றுப் படமாட்டான். பிராணிக்கு ஞானம் உதித்த சரீரத்தை ஆரம்பித்த பிராரப்த கருமாமட்டில் அனுபோகத்தால்தான் நாசமடையுமேயொழிய ஞானத்தால் நாசமடையாது. நான் எனது என்பதில்லா

மல் ஒன்றிலும் பற்றுதலின்றி, சம்பந்தமற்று சகல பிராணிகளிடத்தில் தன்னையும், தன்னிடம் சகல பிராணிகளையும் பார்த்துக்கொண்டு சஞ்சரிக்கிறவனே ஜீவன்முக்தனென்று சொல்லப்படுகின்றான். எப்படி பாம்புச்சட்டையானது பாம்பென்னும் மதியையுண்டுபண்ணுகிறதாக இருந்தாலும் அதினிடத்தினின்று பயமொன்றும் கிடையாதோ அதுபோலவே அந்த ஜீவன்முக்தன் பார்க்கிறவனுக்கு மனிதனாக காணப்பட்டாலும் பார்க்கிறவனுக்கு அவனிடத்தினின்று யாதொரு பயமுமில்லை. எப்போது அவனிடமிருக்கிற சகல காமங்களும் விட்டுப்போகின்றனவோ அப்போதே இறக்குந்தன்மையுள்ள அம்மனிதன் இனி இறக்காத் தன்மையுள்ள பிரும்மமாகின்றான். இவ்வளவுதான் உபதேசம். மோக்ஷத்துக்கிருப்பிடமென்பது ஒன்றில்லை; அது ஓர் ஊருமன்று, இருதயத்திலுள்ளதும் பேதிக்க முடியாததுமான அனாதியாயுள்ள அவித்தியாவாஸனை நாசமடைவதே மோக்ஷமெனப்படும். மரத்தின் நுனியிலிருந்து கால் நழுவினவன் எப்போதும் கீழே விழுகிறானென்பது எப்படி நிச்சயமோ அதுபோல் பிரும்மஜ்ஞான முண்டானவனுக்கு முக்தி கிடைக்கிறதென்பது திண்ணம். பிரும்மஜ்ஞானியானவன் உலகத்தறிவு மறந்து ஜலத்திலாவது சண்டாள கிரகத்திலாவது சரீரத்தைவிட்டாலும் ஞானத்தினால் முக்தி

யடைவான். அவ்வாறே சேரத்தகாதவரிடம் சேர்ந்தாலும், உண்ணத்தகாததைஉண்டாலும், எங்கேயாகிலும் படுத்தாலும் அச்சிவன்முக்தன் எவ்விதத்தாலும் இங்கு முக்தியே பெறுவான். பாலிலிருந்து எடுபட்ட நெய்யானது மறுபடி பாலில் போடப்பட்டாலும் எப்படி அத்துடன் ஒன்றாய்ச் சேராதோ அதுபோல் ஞானியானவன் சமுசாரத்தில் சேரான். ஓ, இராமா! இவ்வத்தியாயத்தை படித்தவனாயினும், கேட்டவனாயினும் இச்சமுசாரபந்தத்திலிருந்து அனாயாஸமாய் விடுபடுகிறான். ஆனதால் சமுசய சித்தமுடைய நீ நித்தம் இதைப் படிக்கவேண்டும். இவ்வாறு இவ்வத்தியாயத்தைப் படிப்பதினாலேயே பிரயாசையின்றி மோக்ஷமடைவாய்."

பதிமூன்றாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 14–வது அத்தியாயம்

## பஞ்சகோசத்தைப் பகுத்தறிதல்.

இராமர் கூறுகின்றார்:–"ஓ பகவானே! ஸச்சிதாநந்தரூபியும், அவயவமில்லாததும், தொழிலற்றதும், அமைதியுள்ளதும், பற்றுதலற்றதும், மனோவாக்குக்கெட்டாததும், பாலில் நெய்போல் எங்கும் நிறைந்ததும், ஆத்தும ஞானம், தவம் இவைகளே தன்னை அறிய மூலகாரணமாயுடையதும், உபநிஷத்துக்

களின் பரமதாத்பரியமும், மூர்த்தியற்றதும், சருவ பூதங்களுக்கு ஆத்துமாவும், காரணத்திற்குக் காரணமும், கண்ணுக்குப் புலப்படாததும், கிரகிக்கமுடியாததுமாகிய உமது ரூபமானது எவ்வாறு அறியமுடியும்? அவ்விஷயத்தில் உபாயமறியாமல் மிக்கவருந்துகின்றேன், அதைக்கூறவேண்டும்" என, சிவபிரான் சொல்வாராயினர்:-"மகாபுஜபராக்கிரமமுடைய இராமா! அதன் உபாயத்தையுரைக்கின்றேன் கேள். சித்தத்தை நிலைநிறுத்தி ஸகுணோபாஸனைகளால் * ஸ்தூலாருந்ததி நியாயமாய் சுத்த பிரும்மத்தினிடத்து சித்தத்தை பிரவர்த்திக்கச் செய்யவேண்டும்.

பிராணிகளுக்கு, நான் என்று எண்ணுவதற்குக் காரணமான அவித்தியா அகங்காரத்தால், ஜன்மம், வியாதி, ஜரை, மிருத்தியவுக்கெல்லாம் இருப்

* ஸ்தூலாருந்ததி நியாயமாவது:-உருவிற் சிறிய அருந்ததிநக்ஷத்திரமானது மற்ற நக்ஷத்திரங்களைப்போல் குறிப்பாய்க் காட்டமுடியாததால் பக்கத்தில் பிரகாசிக்கும்பெரிய நக்ஷத்திரங்களை அடையாளமாகக்காட்டி, பிறகு, அதிலும் சிறிய நக்ஷத்திரத்தைக் காட்டி, பிறகு மிகநுட்பமாய்ப் பிரகாசிக்கும் அருந்ததி நக்ஷத்திரத்தை கடைசியாய்க் காட்டுவதுபோல், நிற்குண பிரும்மரூபத்தில் முதலில் சித்தத்தைப் பதிப்பது அசாத்தியமானதால் உபாதிஸஹிதமான பிரும்மத்தினிடத்தில்முதலில் அச்சித்தத்தைநாட்டி கடைசியாய் நிற்குண பிரும்மத்தினிடத்திற் கொண்டுவரவேண்டுமென்பதாம்.

பிடமும், அன்னமய பிண்டமுமான இந்தஸ்தூல தேகத்தில், ஆத்துமபுத்தியானது ஒருபோதும் அக லாமல் உறுதியாயிருக்கின்றது. ஆத்துமாவோ நித் தியமானதால் ஒருபோதும் இறப்பதுமில்லை, பிறப்ப துமில்லை. உண்டாகிறது, இருக்கிறது, மாறுபடுகி றது, அதிகரிக்கிறது, குறைகிறது, நாசமடைகிறது என்னும் ஆறுபதார்த்த விகாரங்களும் சரீரத்திற்கே உள்ளனவாம். ஆத்துமாவோ கடாகாசம்போல் விகாரமற்றதென்று இவ்விதமாய் வித்துவான்கள் ஆத்துமாவை இந்தஸ்தூல சரீரத்தினின்று பிரித்து அறியவேண்டும்.

குகையில் உருக்கிவிடப்பட்ட தங்கம்போல் பிராணமயகோசம் இவ்வன்னமயமானகோசத்திற்கு முள்ளாயும், தேகத்திற்கோர் கட்டாயும், பிராணாதி வாயுக்களோடும் கருமேந்திரியங்களோடும் கூடினதா ய் அசைதல் முதலிய சகல தொழில்களையுடைய தாக இருக்கிறது. இப்பிராணமய கோசமானது பசி தாகங்களால் வருத்தப்பட்டும் ஜடரூபமாயுமிருப்ப தால் அது ஆத்துமாவன்று. ஏனெனில், ஆத்துமா வானது அந்தப்பிராணமய கோசத்தையும் பிரகாச ப்படுத்துகிறதாயும், இக்கோசங்கள் அனுபவிக்க வே ண்டிய யாதொரு துக்கத்துக்கும் பாத்தியப்படாத தாயும், சித்ரூபியாயும், பற்றற்றதாயும், பேரின்பக் கடலுமாயிருக்கிறது.

அப்பிராணமயகோசத்திற்கும் உள்ளாக சங்கற்ப விகற்ப ரூபமும், ஞானேந்திரியங்களோடு கூடினதுமான மனோமயகோச மிருக்கின்றது. காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாத்ஸரியம் என்னும் ஆறு பகைவர்க்கங்களும், சரீரபுத்திரகளத்திராதிகளில் நான் எனது என்ற அகங்காரம், இச்சை முதலானதும் மனோமய கோசத்தின் தருமங்களாம்.

அம்மனோமயகோசத்திற்கும் உள்ளாக விஞ்ஞானமயகோசமிருக்கின்றது. வேத சாஸ்திரங்களால் நிச்சயிக்கப்பட்ட இகபர கருமவிஷய புத்தியானது ஞானேந்திரியங்களோடு கூடி விஞ்ஞானமயகோசத்தை ஆசிரயித்துக் கொண்டிருக்கிறது. *இக்கோசந்தான் கருத்திருத்துவா அபிமானமுள்ளதும், நான் என்னும் சொல்லுக்கு விஷயமாயுமிருக்கின்றது.

---

* பிராணமய, மனோமய, விஞ்ஞானமய கோசங்கள் மூன்றும் இலிங்க சரீரத்தின் அவயவங்களாயினும் அச்சரீரத்திற்கு கிரியாசக்தி, ஞானசக்தி என்று இரண்டு சக்திகளிருப்பதால், கிரியாசக்தியை பிரதானமாயுள்ளது பிராணமயகோசமென்றும், ஸத்துவகுணத்தின் காரியமான ஞானசக்தியில் தமோகுணம் கலந்தபாகமானது மனோமய கோசமென்றும், ரஜோகுணம் கலந்தபாகமானது விஞ்ஞானமய கோசமென்றும் பகுக்கப்பட்டிருக்கிறது. மேலும், மனம்-புத்தி இரண்டும் அந்தக்கரண விருத்தியாயிருந்தாலும், கரணமாகும்போது மனோமயகோசமென்றும், கருத்தாவாகும் போது விஞ்ஞானமயகோசமென்றும் வியவகரிக்கப்படும்.

சைதன்னிய பிரதிபிம்பமுள்ள இக்கோசந்தான் இகலோக பரலோக கதியை அடைகிறது. இதுவே வியவகரிக்கப்படும் ஜீவனெனப்படும்.

ஆகாயம் முதலிய பஞ்சபூதங்களின் ஸத்துவ பாகங்களிலிருந்து ஞானேந்திரியங்கள் உண்டாகின்றன. அவற்றுள், ஆகாயத்தினின்று சுரோத்திரமும், பூமியினின்று கிராணமும், அப்புவிலிருந்து ஜிஹ்வையும், தேயுவிலிருந்து சக்ஷுஸும், வாயுவிலிருந்து துவக்கும் உண்டாகின்றன. ஆனதால் தான், அவைகள் பௌதிகங்களெனப்படும். ஆகாயம் முதலிய பஞ்சபூதங்களின் ஸத்துவாம்சங்களின் சமுதாயத்தால் புத்தி, மனம் உண்டாகின்றன. நிச்சயரூபமான விருத்தியே புத்தி எனப்படும். வாக்கு பாணி, பாதம், பாயுரு, உபஸ்தம் என்னும் கருமேந்திரியங்கள், ஆகாயம் முதலிய பஞ்சபூதங்களின் ரஜோகுணம்சங்களிலிருந்து முறையே தனித்தனியாயுண்டாகின்றன. ரஜோகுண சமுதாயத்திலிருந்து பிராணன் முதலிய ஐந்து வாயுக்களுண்டாகின்றன. இவ்வாறு, இப்பதினேழு அவயவங்களோடு கூடினது இலிங்கசரீர மெனப்படும். பழுக்கக்காய்ச்சின இரும்புகோளமானது நெருப்பென்றும், இருமபென்றும் தனிதனியாய் பகுக்கப்படாத நிலைமையிலிருப்பதுபோல், இந்த இலிங்கசரீரமானது பரஸ்பர அத்தியாஸவசத்தால் சாக்ஷிசைதன்னியத்

தோடு கூடியிருப்பது ஆனந்தமய கோசமாகும். இந்தக்கோசந்தான் வித்தியாபலம், கருமபலம், முதலியவைகளை இகபரங்களில் அனுபவிக்கிறதாகும். எந்தகாலத்தில் ஆத்துமாவானது அத்தியாஸத்தை விட்டு அவித்தியாமாத்திரத்தோடு கூடினதாய் நிஜசுவரூபத்தோடு தனிகதிருக்கிறதோ அப்போர்க்கொத்த சுழுப்தி முதலானகாலத்தில் சாக்ஷிசைதன்னியமென்று சொல்லப்படும். அதுதான் அந்தக்கரணாதிகளுக்கும், அனுபூதி, ஸ்மிருதி; (நினைப்பு)களுக்கும் சாக்ஷியாக இருக்கிறது. ஆகையால், ஆத்துமாவுக்கு அந்தக்கரணாத்தியாஸத்தாலும், அதில்லாமையாலும், போக்தா, சாக்ஷி என்னும் இருவிதநிலைமையும் யுக்தமாகும். ஆத்துமபிரகாசத்தில் தான் நிழலும் (போக்தா), வெய்யிலும் (சாக்ஷிசைதன்னியம்) பிரகாசிக்கும். அவற்றுள் ஒன்று கருமபலத்தை அனுபவிக்கும்படி செய்கிறதும், மற்றொன்று கருமபலத்தை அனுபவிக்கிறதுமாக இருக்கிறது.

ஓ, இராமா! க்ஷேத்திரஜ்ஞனை இரதி (இரதத்தின் எஜமானன்) யாகவும், சரீரத்தை இரதமாகவும், புத்தியை சாரதியாகவும், மனதைக்கடிவாளமாகவும், இந்திரியங்களைக குதிரைகளாகவும், அக்குதிரை செல்லும் வழி விஷயங்களாகவும், இந்திரியம், மனம் இவைகளோடுகூடின புருஷனை போக்தாவாகவும் அறி. இவ்விதம சமதமாதிகளோடு

ரூர்கள். பக்தி சிரத்தை இல்லாதவர்களாய் இஹ பரபலனை விரும்புகிறவர்களுக்கு அழியும்படியான தும், அல்பமும், தன்னைவிட உயர்ந்தது இருக்கப்பெ ற்றதுமானகருமபலனுண்டாகும். அதை அறியாமல் எந்தமானிடக்கேடர்கள் கருமங்களைச் செய்கின்றூர் களோ அவர்கள் அடிக்கடி மிருத்தியுவின்வாயில் அக ப்பட்டுக்கொண்டு மாதாவின் கருப்பத்தில் ஜனிப்பா ர்கள். பற்பல யோனிகளில் ஜனித்த யாதாவதோர் பிராணிக்கு கோடிஜன்மத்தில் சம்பாதிக்கப்பட்ட புண்ணியங்களால்என்னிடத்தில்பக்தியுண்டாகிறது. எனது பக்தனை அவனே சிரத்தையோடு கூடின வனுகி ஞானத்தை அடைகிறனேயொழிய வேறு கருமங்களை சதகோடி ஜன்மங்கள் செய்திடினும் அடையான். ஆனதால், ஓ, இராமா! எல்லாவற் றையும்விட்டு என்னிடத்தில் பக்திபண்ணு. சகல கருமங்களையுமொழித்து என்னை ஒருவனையே சர ணமாக அடை. யான் உன்னை சகலபாவங்களினின்று விடுவிப்பேன், துக்கப்படாதே. நீ எது செய்கின் ருயோ, எதைப்புசிக்கின்ருயோ, எதை ஆஹுதி செய்கின்ருயோ, எதைக்கொடுக்கின்ருயோ, யாது தவஞ்செய்கின்ருயோ அவையனைத்தையும் எனக் கே அர்ப்பணஞ்செய். ஓ, இராமா! என் விஷய த்தில் இதைவிட வேறு உயர்ந்த பக்திகிடையாது.

பதினுன்காவது அத்தியாயம் முற்றிற்று.

## 15-வது அத்தியாயம். பக்தியோகம்.

ஸ்ரீராமர் வினவுகின்றார்:—“ ஓ, ஜகதீசா ! எத னால் சகல துக்கங்களும் துலைப்பெற்ற மோக்ஷம் பெறலாமோ அப்பேர்ப்பட்ட பக்தியாது? எவ்வி தம் அது உண்டாகும்? எதனால் பிருமமானந்தம் பெறலாம்? அதை அருளவேண்டும்” என, ஸ்ரீ பக வான் கூறுகின்றார். “எவன் வேதாத்தியயனம், எஜ்ஞம், தானம், தவம் முதலியவற்றை எனக்கு அர்ப்பணஞ் செய்யவேண்டுமென்று எண்ணத்துடன் செய்வானோ அவனே எனக்கு பக்தனும், பிரியனு மாவான். காசி, தணடகை, ஸ்ரீசைலம். புண்டரீ கம் இவ்க்ஷேத்திரங்களில் என்னை விரும்பி எவன் உபாசிக்கின்றானோ அவனே எனக்கு பக்தனும், பிரியனுமாவான். சுரோத்திரியர்களுடைய கிரகத்தி லிருந்து சுத்தமான கார்ஹபத்யாக்கினி பஸ்மத்தை எடுத்து விதிப்படி மந்திரங்களால் அபிமந்திரித்து உடம்பில் பூசிக்கொண்டு அதினாலேயே என்னை பூஜி ப்பானாயின் அவனைவிடவேறு பக்தன் கிடையாது. எப்போதும் எவன் சிரசிலும், கழுத்திலும் ருத்திரா க்ஷங்களை தரித்துக்கொண்டு பஞ்சாக்ஷரி ஜபம் செய் கிறவனாக இருக்கின்றானோ அவனே எனக்கு பிரிய னும் பக்தனுமாவான். எவனொருவன் எப்போதும் இந்திரியங்களைவென்று சருவாங்கமும் திருநீறு தரி த்து, விபூதியில்படுத்து ருத்திரமந்திரத்தை ஜபித்து

சித்தத்தைப் பக்கத்தில்விடாது என்னையே தியானிக்கின்றானோ அவன் ஆச்சரியத்துடன் சுவயம் சிவனாகவே ஆகின்றான். அன்றியும், எவன் ருத்திரசூக்தங்களையும், அதர்வசிரசையும், சுவேதாசுவதரமந்திரத்தையும், கைவல்லியோபநிஷத் ஸூக்தங்களையும் ஜபிக்கின்றானோ அவனைவிட மேலான என்பக்தன் உலகிலவேறு எவனும் கிடையாது. எந்த வஸ்துவானது தருமாதருமங்களைக்காட்டிலும் வேறாயும், காரியகாரணங்களைக்காட்டிலும் விலக்ஷணமாயும், சென்றகாலத்திலுள்ளவைகள், நிகழ்காலத்திலுள்ளவைகள், வருங்காலத்திலுள்ளவைகள் இவைகளைவிட அன்னியமாயுமிருக்கிறதோ, சகல வேதங்களும், பற்பல சாஸ்திரங்களும் எதைச் சொல்லுகின்றனவோ அப்பேர்ப்பட்ட வஸ்துவைப்பற்றிய சகல உபநிஷத்துகளின் சாரத்தை தயிரிலிருந்து நெய்யை எடுப்பதுபோல் எடுத்துரைக்கின்றேன் கேள். முனிவர்கள் எப்போதும் எதைநாடி பிரும்மசரியத்தை அனுஷ்டிக்கின்றார்களோ, அப்பேர்ப்பட்ட வஸ்துவை அடைவிக்கும்படியான ஓம் என்னும் பதத்தைப்பற்றியுரைக்கின்றேன். அந்த ஓமென்னும் அக்ஷரமே அபரப்பிரும்மமும், பரப்பிரும்மமுமாம். அவ்வக்ஷரத்தை இவ்வாறுஅறிந்து உபாசித்து பரத்தையாவது அபரத்தையாவது எதைவிரும்புகின்றானோ

அப்பிரும்மத்தை அடைவன். இதுதான் * ஆலம் பனங்களுக்குள் மிகச்சிலாக்கியமும் முக்கியமானது மாம். அவ்வாலம்பனத்தை அறிந்தவன் அபரப் பிரும்மவிஷயமாய் அறிந்தால் பிரும்மலோகத்தில் பூஜிக்கப்படுகிறுன். பரப்பிரும்மவிஷயமாய் அறிந் தால் பிரும்மமாகி யாவராலும் உபாசிக்கத்தக்கவனு கின்றுன்.

எந்தப்பிரணவமானது காயத்திரீ முதலிய சந் தங்களோடுகூடிய வேதங்களாகிற பசுக்களுக்கு விரு ஷபமாக (பிரதானம்) தைத்திரீய சுருதியில் சொல் லப்பட்டிருக்கிறதோ, எந்தப் பிரணவமானது மோ க்ஷத்தை வைத்துக்கொண்டிருப்பதால் சகல ஐசுவ ரியத்தோடு கூடினதாகவும் புத்திக்குப் பதியாகவும் சகல இஷ்டத்தையும் அளிக்கிறதாகவும் சொல்லக் கூடியதோ, லெளகிக புத்தியால் சுவரூபம் மறைக்க ப்பெற்ற யாதொரு ஓமென்னும் கோசத்தில் (ஆலம் பனம்)பரப்பிரும்மமானது இருக்கின்றதோ அப்பே ர்ப்பட்ட ஓங்காரத்திற்கு நான்கு மாத்திரைகளுள் ளன. (மூன்று முழுமாத்திரையும் ஓர் அரை மாத் திரையுமாம்.) அகாரம், உகாரம், மகாரமாகிய ஒ வ்வொன்றுக்கும் ஓர் முழுமாத்திரையும், கடைசி யில் ஓர் அரை மாத்திரையுமாம்.

---

* ஆலம்பனமென்பது, பாணலிங்கம் முதலான ஈசுவர பாவனைக்கு ஆதாரமான வஸ்துக்கள்.

அவற்றுள், முதல்மாத்திரையானது பூலோகம், ருக்குவேதம், காயத்திரீசந்தம், பிரும்மா, கார்ஹபத்தியாக்கினி, பிராதஸ்ஸவனம், அஷ்டவசுக்கள், கங்காநதி ஆகிய இவைகளாகவும், இரண்டாவது மாத்திரையானது அந்தரிக்ஷலோகம், எஜுர்வேதம், அனுஷ்டுப்புசந்தம், விஷ்ணு, தக்ஷிணாக்கினி, மாத்தியந்தினஸவனம், ருத்திரர்கள், யமுனாநதியாகிய இவைகளாகவும், மூன்றவது மாத்திரையானது சுவர்க்கலோகம், ஸாமவேதம், ஜகதிசந்தம், மகேசுவரர், ஆஹவனீயாக்கினி, திரிதியஸவனம், ஆதித்தர்கள், சரஸ்வதீநதி இவைகளாகவும் எண்ணப்படும். கடைசியில் நாதரூபமாகிய நான்காவதோவென்றால் ஸோமலோகத்தினுள்ளதும், மகர்லோகம், அதர்வாங்கிரஸ்வேதம், விராட்சந்தம், ஸம்வர்த்தகர், அக்கினி, ஸப்பியம் ஆவஸத்தியம் என்னுமக்கினி, *யஜ்ஞபுச்சம், சுதத்திரிநதியாகிய இவைகளாக எண்ணப்படும்..

முதலாவது மாத்திரை இரத்தவரணமாகவும், இரண்டாவது மாத்திரை ஓர்வித வெளுப்புவரணமாகவும், மூன்றாவது மாத்திரை மின்னல் வரணமாகவும், நான்காவது மாத்திரை சுத்தவெள்ளை வரணமாகவும் உள்ளது.

உண்டானது, உண்டாகிறது, உண்டாவதெல்லாம் ஓங்காரத்திலேயே பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது. ஏனென்றால், விசித்திரமாயும், பலவாராயும், உண்டானதும், உண்டாகிறதும், உண்டாவதுமான சகல பிரபஞ்சமும் உருத்திரராகவே சொல்

---

* எஜ்ஞபுச்சமென்பது மூன்று ஸவனங்களுக்குப் பின்பு நடக்கும் எஜ்ஞபாகமாம்.

லப்படுகிறது. அப்பேர்ப்பட்ட புராதன பிரும்மமானது ஓங்காரத்திலிருக்கிறது. ஆனதால் ஓங்காரத்தை எவன் ஜபிப்பானோ அவன் முக்தனுவானென்பதில் சந்தேகமேயில்லை.

திரேதாக்கினியிலிருந்தாவது, ஸ்மார்த்தாக்கினியிலிருந்தாவது, சைவாக்கினியிலிருந்தாவது எடுத்த பஸ்மாவினால் பிரணவத்தால் அபிமந்திரித்து என்னை எவன் பூஜிக்கின்றானோ உலகில் அவனைவிட வேறு பக்தன் கிடையாது. வீட்டிலிருக்கும் அக்கினியிலிருந்தாவது, காட்டிலிருக்கும் அக்கினியிலிருந்தாவது எடுத்த பஸ்மாவை அபிமந்திரித்து எவன் சரீரங்களில் பூசிக்கொள்ளுகிறானோ அவன்சூத்திரனுயினும் முக்தனுவானென்பதில சந்தேகமில்லை. நாணற்பூக்களாலும், வில்வதளங்களாலும், மலையிலுண்டான பூக்களாலும் பிரணவத்தாலேயே என்னை எவன் பூஜிக்கிறானோ அவனே எனக்குப் பிரியமுள்ளவன். புஷ்பம், பழம், மூலம், பத்திரம், ஜலம் இவைகளை பிரணவபூர்வமாக எனக்கு அர்ப்பணஞ் செய்வானுனால் அது கோடிமடங்காய் விருத்தியடையும். அன்றி, பிறற்குப் பொல்லாங்கு செய்யாமை, பொய்மொழிதலின்மை, களவின்மை, பரிசுத்தம், பொறியடக்கம், வேதமோதல் இவைகள் யாருக்கிருக்கின்றனவோ அவனே எனது பக்தனும், பிரியனுமாவான். பிரதோஷகாலத்தில் எனதிடம் வந்து எவன்

பூஜிக்கின்றானோ அவன் அளவற்ற ஸம்பத்தை அடைவதுடன் முடிவில் என்னிடமே லயமடைகிறான். அஷ்டமியிலும், சதுர்த்தசியிலும், இரண்டு பருவங்களிலும் சருவாங்கங்களில் விபூதியைப் பூசிக்கொண்டு, விசேஷமாக கிருஷ்ணபக்ஷத்து இராத்திரியிலும் என்னை எவன் பூஜிக்கின்றானோ அவனே எனக்கு பக்தனும் பிரியனுமாவான். ஏகாதசியில் உபவாசமிருந்து இரவிலும் என்னை யார் பூஜிக்கின்றானோ, அவ்வாறே, விசேஷமாக சோமவாரத்திலும் எவன் என்னை பூஜிக்கின்றானோ அவனும் எனது பக்தன். அவனுக்கு ஒருநாளும் கேடுகிடையாது. பஞ்சாமிருதம், பஞ்சகவ்வியம், புஷ்போதகம், குசஜலம் இவைகளால் என்னை எவன் அபிஷேகம் செய்கின்றானோ அவனைவிட எனக்கு பிரியமுள்ளவன் வேறுகிடையாது. பால், நெய், தேன், கருப்பஞ்சார், பழுத்த மாம்பழரஸம், இளநீர், கந்தோதகம் இவைகளில் எதினாலாவது ருத்திரமந்திரத்தை ஜபித்துக்கொண்டு எவன் அபிஷேகம் செய்கின்றானோ அவனைவிட எனக்கு பிரியன் வேறு எவனுமில்லை. சூரியனை நோக்கிநின்று கைகளை உயரத்தூக்கிக்கொண்டு ஜலத்திலிருந்து சூரியமண்டலத்திலிருக்குமென்னை தியானித்துக்கொண்டு அதர்வாங்கிரஸமந்திரத்தை எவன் ஜபிக்கின்றானோ அவன், வீட்டின் எஜமானன் தன் வீட்டில் பிரவேசிப்பதுபோல்

என் சுவருபத்தில் பிரவேசிப்பான். பிருஹத், ரதந்தரம், வாமதேவியம், தேவவிருதம், தத்யோகம், ஆஜ்ஜியதோஹம் என்னும் ஸாமாக்களை என்முன் எவன் கானஞ்செய்கின்றனோ அவன் இவ்வுலகில் அளவற்ற சம்பத்தை அனுபவித்து எனது சாயுஜ்ஜியத்தையும் முறையே அடைவான். அன்றியும், ஈசாவாஸியாதி மந்திரங்களை தினந்தோறும் என்முன் எவன் ஜபிக்கின்றனோ அவன் என்னுலகத்தில் பூஜிக்கப்படுவதுமன்றி, எனது ஸாயுஜ்யமும் பெறுவான். ஓ, இரகுகுலோத்தமா! சகல காமங்களையும் கொடுக்கும்படியான பக்தியோகமானது என்னால் சொல்லப்பட்டது. வேறு எதைக் கேட்க விரும்புகின்றாய்."

பதினைந்தாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 16-வது அத்தியாயம், மோக்ஷயோகம்.

இராமர் வினவுகின்றார்:—"ஓ, பகவானே! தேவரீரால் மோக்ஷமடையும் வழி நன்றாய் எடுத்துரைக்கப்பட்டது. அந்தமோக்ஷத்தை அடையும் அதிகாரி எவ்விதமிருக்கவேண்டும்? அவ்விஷயத்தில் எனக்கு சந்தேகம் மிகவும் பலமாயிருப்பதால் அதைக் கூற வேண்டும்" என, ஸ்ரீபகவான் சொல்லத்தொடங்கினார்:—"நீ வினவிய மோக்ஷத்திற்கு பிராமணன்,

க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன் ஆகிய இந்நான்கு வர்ணத்தாரும், ஸ்திரீகளும் அதிகாரிகளே. அதிலும், உபநயனமாகாதவன், பிரும்மச்சாரி, கிரஹஸ்தன், வானப்பிரஸ்தன், ஸன்னியாசி, பாசுபதவிருதமுடையவன் ஆகிய இவ்வாசிரமிகளில் எவர்களானாலும் அதிகாரிகளாவார்கள். வெகுவாய்ச் சொல்லுவதாலென்ன. எவனுக்குச் சிவார்ச்சனையில் பக்தியிருக்கிறதோ அவனே இதில் அதிகாரியாவானேயொழிய மற்ற வேறு சித்தமுள்ளவர்கள் ஒருபொழுதும் இதற்கு அதிகாரியாகார்கள். மூடன், குருடன், செவிடு, ஊமை, பரிசுத்தமற்றவன், கருமங்களை விட்டவன், அனியர்களை மூடர்களென்று பரிகாசிப்பவன், பக்தியில்லாதவன், விபூதி, ருத்திராக்ஷம் தரித்தவர்களையும், ஆசிரமதருமமுள்ளவர்களையும் துவேஷிக்கிறவன் ஆகிய இவர்கள் இதில் அதிகாரியாகவே மாட்டார்கள். என்னையும், குருவையும், பாசுபதவிருதத்தையும், விஷ்ணுவையும் துவேஷிக்கிறவனுக்கு எத்தனை கோடி ஜன்மங்களெடுத்தும் கரையேற்றமில்லை. அனேக கருமங்களில் முயற்சியுள்ளவனாயிருந்தும், சிவஞானமும், சிவபக்தியுமில்லாவிடில் அவன் சமுசாரத்தினின்று விடுபடமாட்டான். எவர்கள் பிரயோஜனத்தை நாடி வேதத்திற்குப் புறம்பான கருமங்களைச் செய்கின்றார்களோ அவர்களுக்குக் கண்கண்டபயனேயொழிய

முக்தியில் சிறிதும் அவர்கள் அதிகாரியாகமாட்டார்கள். காசி, தண்டகை, துவாரகை, ஸ்ரீசைலம், புண்டரீகம் இந்தக்ஷேத்திரங்களில் தேகவியோகம் நேரிடுங்கால் எனது அனுக்கிரகத்தால் பிரும்மரூபமான தாரகமந்திரத்தை அடைகின்ருன். எவனுடைய கைகள், கால்கள், மனம், வித்தை, தவம், கீர்த்தி இவைகள் அடக்கமுள்ளவைகளாயிருக்கின்றனவோ அவன் புண்ணியக்ஷேத்திர தீர்த்தபலனை அடைவான். பிதருகருமங்களில் வேதமந்திரத்தைச் சொல்லுவதைத்தவிர மற்றெருபொழுதும் உபநயனமாகாத பிராமணன் வேதமந்திரத்தை உச்சரிக்கக்கூடாதென்று விதிக்கப் பட்டிருக்கிறது. காயத்திரீ உபதேசத்தால் இரண்டாவது பிறப்பை அடைவதற்கு முந்தி அவன் சூத்திரனுக்குச் சமானமாவான். ஆனால் நாமஸங்கீர்த்தனம், தியானம் இவைகளில் எல்லாரும் அதிகாரிகள்தான். மனிதன் சுவயம் சிவசுவரூபமென்று பாவனை செய்தால் சம்சாரத்தினின்று விடுபடுகிருன். தானம், தவம், வேதாத்தியயனம், மற்றகருமாக்கள் இவைகளெல்லாம் எப்போதும் தியானமென்ற கருமாவின் ஆயிரத்திலோர் பாகங்கூட ஆகமாட்டாது. தியானமானது ஒருபோதும் ஜாதி, ஆசிரமம், அங்கங்கள், இடம், சமயம், ஆஸனம் முதலிய இக்கருமங்களை அபேக்ஷிக்காது. நடந்துகொண்டாவது, நின்றுகொண்டா

வது, திரிந்துகொண்டாவது, படுத்துக்கொண்டாவது, வேறுகாரியங்கள் செய்துகொண்டாவது, பாதுகையோடு கூடியிருந்தாவது தியானம் செய்தமாத்திரத்தில் முக்தனுவான். இதற்கு கிரமபங்கமும், தோஷமும் கிடையாது. இந்த தருமத்தின் ஓர் துளிகூட மகாபயத்தினின்று காக்கும். ஆச்சரியப்படும் வேளையிலாவது, பயப்படும் வேளையிலாவது சோகப்படும் வேளையிலாவது, தும்பும் வேளையிலாவது, வேறு வியாஜத்தினுலாவது எனது பெயரை யார் நினைக்கின்றுனே அவன்மேலான கதி பெறுவான். மகாபாபங்கள் செய்திருந்தாலும் பிராணுந்தியகாலத்தில் எவனொருவன் என்னையாவது நினைக்கின்றுனே, பஞ்சாக்ஷர மந்திரத்தையாவது உச்சரிக்கின்றுனே அவன் முக்தனுவதில் யாதொருசந்தேகமில்லை. எவன் தன்னையும், பிரபஞ்சத்தையும் சிவசுவரூபமாக நினைக்கின்றுனே அவனுக்கு தீர்த்தம், க்ஷேத்திரம், மற்றுமுள்ள கிரியைகளிலாவது என்ன செய்யவேண்டிருக்கிறது. யாவரும், எப்பொழுதும் விபூதி, ருத்திராக்ஷங்களைத் தரிக்கவேண்டும். எவன் தகுந்தவனுனுலும், தகாதவனுனுலும் சிவபக்தியை விரும்பி கார்ஹபத்தியாக்கினி பஸ்மாவை பூசிக்கொண்டு ருத்திராக்ஷங்களையும் தரிக்கின்றுனே அவன் மகாபாதகங்களால் பற்றப்பட்டிருக்கினும் விடுபடுவானென்பதில் சிறிதும் சந்தேகமில்லை. மற்ற சிவனுஞ்

குறிய கருமங்களைச்செய்தாலும், செய்யாவிட்டா லும் எப்போதும் சிவநாமாவை ஜபிப்பானேயாகில் அவன் சம்சாரத்தினின்று விடுபடுவான். எவனொருவன் அந்தியகாலத்தில் விபூதி, ருத்திராக்ஷங்களைத் தரிக்கின்றானோ அவன்மகாபாதகம், உபபாதங்களையுடைய மானிடக்கேடனாயினும் எமதூதர்கள் எவ்விதத்திலும் அவனிடம் நெருங்குகிறதில்லை. பில்வ மரத்தடிமண்ணை அந்திகாலத்தில் சரீரத்தில் எவன் பூசிக்கொள்ளுகின்றானோ அவனிடம் எமதூதர்கள் எட்டவிலகி விடுகிறார்கள்" என, இராமர்,- ஓ, "ஈசா! தம்மை எவ்வெவ்விடத்தி லருச்சித்தால் பிரஸன்னராவீர்? அவ்விஷயத்தைக் கேட்க மிக்க விருப்பமிருப்பதால் அதை எனக்கு அருளவேண்டும்" என, ஸ்ரீபகவான் கூறுகின்றார்:—மண், கோமயம், பஸ்மா, சந்தனம், மணல், கட்டை, கருங்கல், இரும்பு, ஈயம், வெண்கலம், தகரம், பித்தளை, செப்பு, வெள்ளி, தங்கம், பற்பலரத்தினங்கள், ரஸம், கருப்பூரம் இவைகளில்எதிலாவது பதுமையாகவாவது, சிவலிங்கமாகவாவது செய்து அதில் என்னைப் பூஜைசெய்வானேயானால் பலன் கோடிமடங்கு அதிகம். எப்பொழுதும் க்ஷேமத்தைவிரும்புகிற கிரஹஸ்தாசிரமியானவன் மண், கட்டை, வெண்கலம், லோஹம், கல் இவைகளுக்குள் எதினாலாவது பதுமைசெய்து பூஜிப்பானாயின் முறையே ஆயுள், சம்பத்து, குலம்,

தருமம், புத்திரன் இவைகளை அடைவான். பில்வவிருக்ஷத்திலாவது, அதன் பழத்திலாவது என்னை எவன் பூஜிக்கின்ருனோ அவன் இம்மையில் அளவற்றசம்பத்தை அனுபவித்து மறுமையில் எனது உலகில் பூஜிக்கப்படுவான். பில்வமரத்தடியில் உட்கார்ந்து மந்திரங்களை ஜபித்து ஒருநாளிலேயே அதன் புரச்சரணங்கள் செய்தாலும், அல்லது, பில்வவனத்தில் குடிசைக்கட்டிக்கொண்டு வசித்து மந்திரஜபம் செய்தாலும் ஜபித்தமாத்திரத்திலே சகல மந்திரங்களும் ஸித்தியாகின்றன. மலையினுச்சி, நதிக்கரை, பில்வமரத்தடி, சிவாலயம், அக்கினிஹோத்திரசாலை, விஷ்ணுசந்நிதி இவ்விடங்களில் ஜபம் செய்பவனுக்கு அசுர-யக்ஷ-ராக்ஷஸர்கள் விக்கினஞ்செய்யவேமாட்டார்கள். அவனை பாபமும் தொடுகிறதில்லை. அத்துடன் சிவஸாயுஜ்யத்தையும் முறையே அடைவான். பூமி, ஜலம், அக்கினி, வாயு, ஆகாயம், குரு, தனது ஆத்துமா இவைகளில் என்னை எவன் பரிசுத்தனாக இருந்துகொண்டு பூஜிக்கிருனோ ஓர் தளத்தால் பூஜை செய்வதாலேயே அவன் சம்பூர்ண பலனை அடைவான். ஓ, ரகுநந்தனு! ஆத்தும பூஜைக்கு சமானம் வேறென்றுங்கிடையாது. சண்டாளனையினும் ஆத்துமபூஜை செய்தால் என் சாயுஜ்யத்திற்குவருவான்.

ஆஸனவிதி:—கம்பளாஸனத்திலிருந்து ஜபம், பூஜை செய்பவன் சகல காமங்களையும் அடைவான்.

மான் தோலில் முக்தியையும், புலித்தோலில் மோக்ஷத்தையும், தர்ப்பாஸனத்தில் ஞானத்தையும், பத்திராஸனத்தில் ஆரோக்கியத்தையும், பாஷாணத்தில் துக்கத்தையும், கட்டையில் அனேக வியாதியையும், வஸ்திரத்திலிருந்து பூஜை, ஜெபம் செய்தால் சம்பத்தையுமடைவான். பூமியிலிருந்து ஜபிப்பவனுக்கு மந்திரசித்தி கிடையாது.

ஜபமாலாவிதியைக் கூறுகின்றேன், ஜாக்கிரதையாய்க்கேள். ஸ்படிகமாலை ஸாம்பிராஜ்யத்தையும், பூனைக்காச்சிமணி அளவற்ற சம்பத்தையும், தருப்பை முடிச்சு ஆத்துமஞானத்தையும், ருத்திராக்ஷம் சருவகாமங்களையும் கொடுக்கும். பவழமாலையானது சகல லோகத்தையும் வசியப்படுத்தும். நெல்லிக்கனிமணிமாலை மோக்ஷத்தையும், முத்துமாலை சகல வித்தைகளையும் கொடுக்கும். நீலக்கல், பச்சைக்கல்களால் செய்யப்பட்ட ஜபமாலை சத்துருக்களுக்குப் பயத்தைக் கொடுக்கும். அன்றியும் தங்கமாலை மகா சம்பத்தையும், வெள்ளிமாலை இஷ்டப்பட்ட கன்னிகையையும், இரஸத்தினால் செய்யப்பட்ட மாலை மேற்சொல்லிய சருவ காமங்களையும் கொடுக்கும்.

அவற்றுள், நூற்றெட்டு கொண்டது மிகவும் உத்தமோத்தம மாலையென்றும், நூறுகொண்டது உத்தமமென்றும், ஐம்பத்துநான்கு அல்லது ஐம்பது

கொண்டது மத்திமமென்றும், இருபத்தேழு அல்லது, இருபத்தைந்துகொண்டது அதமமென்று முறைக்கப்பட்டிருக்கின்றது. நூறு மணி மாலையாயிருந்தால் அகாரம் முதல் க்ஷகாரம் வரையிலுள்ள ஐம்பது அக்ஷரங்களையும் முறையே பதிப்பித்து, மறுபடியும், க்ஷகாரம் முதல் அகாரம் வரையில் தலை கீழ் வரிசையாகப் பதிப்பித்துக்கொள்ளவேண்டும். ஜபமாலையை ஒருவருக்கும் காண்பிக்காமல் வைத்துக்கொள்ளவேண்டும். எவன் வரணங்கள் பதிப்பிக்கப்பட்ட மாலையினுல் ஜபம் செய்கின்ருனே அவனுக்கு ஒரு முறை ஜபம் செய்வதாலேயே புரச்சரியை செய்யப்பட்டதாக வாகும்.

இடது குதிகாலை குதத்திலும், வலது காலை ஆண்குறியின் மேலும் வைத்துக்கொள்வது யோனிமுத்திராபந்தமாம். இது உத்தமமான ஆஸன மெனப்படும். எவனெருவன் யோனிமுத்திராஸனத்திலிருந்துகொண்டு மனவடக்கமுடன் மந்திரத்தை ஜபிக்கின்ருனே அவனுக்குசகல ஸித்திகளுமுண்டாகும். எந்த மந்திரங்கள் வெட்டும் படியானதும், தடுக்கும்படியானதும், ஸ்தம்பனம் பண்ணும்படியானதும், விழிக்கச் செய்யும்படியானதும், மூர்ச்சையடையச் செய்யும்படியானதும், தூங்கச் செய்யும்படியானதும், பைத்தியங்கொள்ளும்படியானதும், வீரியத்தைக் குறைக்கும்படியானதும், எரிக்கும்படியா

னதும், பயமுறுத்தும்படியானதும், பகைவன் பக்கத்தில் செல்லும் படியானதும், பாலியம், யௌவனம், கிழத்தனம் இவைகளைக் கொடுக்கும்படியானதும், மதிமயக்கத்தைக் கொடுக்கும்படியானதுமாக இருக்கின்றதோ அவ்வித மந்திரங்களை யெல்லாம் யோனிமுத்திராஸனத்திலிருந்து கொண்டு ஜபிப்பவனுக்கு அம்மந்திரங்கள் ஸித்திக்குமே யொழிய மற்றவர்க்கு ஸித்திக்காது.

பிராம்ம முகூர்த்தம் முதற்கொண்டு மத்தியான்னம் வரை மந்திரத்தை ஜபிக்கலாம். அதற்கு மேல் மந்திரம் ஜபிப்பவன் நாசமடைவா னென்பது நிச்சயம். புரச்சரணவிதியிலும், காமியபலன்களிலும் இம்மாதிரிதான். நித்திய, நைமித்திகங்களிலும், தபச்சரியைகளிலும் எப்போதும் ஜபம் செய்யலாம். அதில் யாதொரு தோஷமும் கிடையாது. எவன் ஆசையை ஒழித்து, பொறிகளை வென்று எனது ஸ்வரூபத்தை தியானித்துக்கொண்டு நிதம் உருத்திர மந்திரத்தை ஜபிக்கின்றானோ, அல்லது, ஷடக்ஷரம், பிரணவம், அதர்வசிரோமந்திரம், கைவல்லியம் இவைகளில் ஏதாவது ஒன்றையாவது ஜபிக்கின்றானோ அவன் அச்சரீரத்துடன் சுவயம் சிவனாக ஆகின்றான். எவனொருவன் இந்தச் சிவகீதாப்பிரபந்தத்தை அத்தியயனஞ் செய்து நித்தம் ஜபிக்கின்றானோ, அல்லது, கேட்கின்றானோ

அவன் சம்சாரத்தினின்று விடுபடுவதில் சிறிதும் சந்தேகமில்லை" என மொழிந்தார்.

சூதபுராணிகர், "சௌனகாதிமகரிஷிகளை நோக்கி, ஓ, முனிவர்களே! ஜகதீசனாகிய ஸ்ரீமகாதேவர் இவ்விதம் இராமருக்குத் திருவாய்மலர்ந்தருளி அந்தர்த்தானமடைந்தார். பின்பு, இராமர் தாம் கிருதார்த்தனானேனென்று எண்ணி அவ்வாறேயானார். இவ்வாறு சுருக்கமாக சிவகீதை சொல்லப்பட்டது. இதை எவன் சித்தத்தைப்பக்கத்தில் செலுத்தாது ஜபிக்கின்றானோ அவனுக்கு முக்தி கையிலிருக்கிறது. ஆகையால், ஓ, ரிஷிசிரேஷ்டர்களே! நீங்களும இதை தினந்தவறாது உறுதியுடன் கேட்பீர்களாயின் அனாயாஸமாய் முக்தி அடைவீர்கள். அதில் சந்தேகமேயில்லை. சரீரத்திற்கு சிரமமும், மனதிற்குக் குழப்பமும், மனக்கிலேசமும் தனக்குக் கிடையாது. எதைக் கேட்டமாத்திரத்தில் பீடைகள் துலைந்து கைவல்விய பலன் கிடைக்குமோ அவ்வித மகிமைபொருந்திய சிவகீதாப் பிரபந்தத்தை தினந்தவறாது கேளுங்கள்" எனத் திருவாய்மலர்ந்தருள, ரிஷிகள் :—"ஓ, சூதமுனிவரே! இன்றுமுதல் நீரே எங்களுக்குஆசிரியர், நீரே தந்தை, நீரே குரு. ஏனெனில், அவித்தைக்கடலினின்று கரையேற்றினவரன்றோ! பெற்ற தந்தையைவிட பிரும்மஞ்ஞானத்தை க்கொடுத்த தந்தை உயர்ந்தவரன்றோ! ஆகையால்,

ஓ, சூதமுனிவரே! உம்மைத்தவிர உண்மையில் எங்களுக்கு வேறு குரு இல்லை'' என்றார்கள்.

வியாஸர்:—இவ்வாறு சொல்லியபின் அவ்வெல்லோரும் மனக்களிப்படைந்து சூதமுனிவரைத் துதித்துக்கொண்டு ஸாயம் ஸந்தி உபாஸனத்திற்காக கோமதீ நதிக்கரைக்குச் சென்றார்கள்.

இவ்விதம், பாத்துமபுராணத்தில், உத்திரகண்டத்தில், சிவகீதை என்ற உபநிஷத்தில், பிரும்மவித்தியாயோக சாஸ்திரத்தில் சிவகிதாதிகார மோக்ஷயோகமென்ற பதினாறும் அத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீ சிவகீதை வசனம்

முற்றிற்று.



